KALKI
21.10.90
ரூ. 2.50

# கல்கி

தீபாவளிச்
சிறப்பிதழ்



நெஞ்சை அள்ளும் தஞ்சை ஓவியங்கள்

# இப்போது, விம் ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.




## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்

LINTAS-VG-482A-2519 TAM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# யார் அந்த மண்டல்?



மண்டல் கமிஷன் அறிக்கையைச் சமர்ப்பித்தவரின் முழுப்பெயர் பிந்தேஸ்வரி பிரசாத் மண்டல்.

மொரார்ஜி தேசாயின் அரசாங்கத்திலிருந்து, சரண்சிங் விலகிய போது, அந்த நெருக்கடியைச் சமாளிக்கும் முயற்சியாக மொரார்ஜி, மண்டல் தலைமையில் டிசம்பர் 78 இல் இரண்டாவது பிற்பட்டோர் கமிஷனை அறிவித்தார். இரண்டாண்டுகளுக்குப்பின் மண்டல், தமது அறிக்கையை இந்திரா காந்தியிடம் சமர்ப்பித்தார். அறிக்கை கிடப்பில் போடப்பட்டது.

மண்டல், கிராமப்புற பின்னணி கொண்ட அரசியல்வாதி. பீகாரின் சஹர்சா மாவட்டத்தைச் சேர்ந்த ஜமீந்தார் குடும்பத்தைச் சேர்ந்தவர். இளம் வயதிலேயே அரசியலுக்கு வந்து விட்ட மண்டல், காங்கிரஸ் தவிர சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி, ஷோசித் கட்சி ஆகியவற்றிலும் இருந்திருக்கிறார்.

மண்டலுக்கு இன்னொரு பெருமையும் உண்டு. இந்திய அரசியலில் கட்சி மாறிய முதல் எம். எல். ஏ. இவர்தான். குறிப்பிட்ட பிற்படுத்தப்பட்ட ஜாதியினருக்கு எதிராய் வன்முறைகள் நிகழ்ந்தபோது, அப்போதைய பீகார் முதல்வர் கே.பி. சாஹே எந்த நடவடிக்கையும் எடுக்காததை எதிர்த்துத் தான் ராஜினாமா செய்து வேறு கட்சியில் சேர்ந்தார்.

மண்டலுக்கு மிகக் குறுகிய காலம் முதலமைச்சராய் இருந்தவர் என்ற பெருமையும் உண்டு! 49 நாட்கள் பீகார் முதலமைச்சராய் இருந்திருக்கிறார் மண்டல்!

தகவல்: **மௌஷ்மி**

---

## இரண்டு இலவச இணைப்புகள்!



அன்பார்ந்த நேயர்களுக்கு,
தீபாவளி நல்வாழ்த்துக்கள்.

**இந்த இதழில் உங்களுக்கு என்றென்றும் பயன்படக் கூடிய இரு இலவச இணைப்புகள் உள்ளன. கல்கி வழங்கும் பொக்கிஷம் போன்ற இலவச இணைப்புகள் தனியே வழங்கப்பட்டால் சரியாக வந்து சேர்வதில்லை; கைதவறி விடுகிறது என்பது போன்ற புகார்களைத் தவிர்க்க ஒரு சின்ன ஏற்பாடு:**

**இதழின் மத்தியிலுள்ள பின்களை இலேசாக உயர்த்தி, நடுவிலுள்ள பதினாறு பக்கங்களை மட்டும் தனியே பிரித்தெடுத்து விட்டு, மீண்டும் பின்களை நெருக்கி மூடிவிடலாம். பிரித்தெடுத்த பக்கங்களைக் குறுக்கே கத்திரித்து ஒவ்வொன்றின் மத்தியிலும் ஊசி நூல், குண்டூசி, அல்லது ஸ்டேப்ளர் கொண்டு தைத்து விடலாம். இப்போது இரு இலவச இணைப்புகள் ரெடி!**

**தீக்குவானேன்? கல்கியை அப்படியே பாதுகாத்து வைக்கிறோமே என்றால்... ரொம்ப சரி!**

— **ஆசிரியர்**

**தீபாவளித் திருநாளில் இந்தத் தென்திசை வேங்கடாசலபதியைத் தெரிந்து கொள்ளுங்களேன்!**

# தெற்கேயும் ஒரு திருப்பதி!

கற்பூர ஹாரத்தி காட்டப்படுகிறது. முகம்.. மார்பு... திருக்கரங்கள்.. பாதார விந்தங்கள்.. மீண்டும் மெல்ல மெல்ல மேலே நீத் திருமுக தரிசனம் காட்டி இன்னும் மேலே... திருவாசிக்கும் மேலே தீப ஜோதி பரவும் போது —

"மேலே பாருங்கள்.. மேலே பாருங்கள்" என்று குரல்கள் கேட்க:. மேலே ஆதிசேஷன் அழகாகப் படமெடுத்துக் குடை பிடிக்கிறார்.

திருப்பதி பாலாஜி போன்றே காட்சியளிக்கும் பெருமாளின் திருவாசிக்கு மேல் உள்ள ஆதிசேஷன் மட்டுமே உபரி அலங்காரம்.

எங்கே இருக்கிறார் இந்தத் தென் திசை வேங்கடாசலபதி? சென்னைக்குத் தெற்கே எழுபது கிலோ மீட்டர் தூரத்தில்சென்னை — திருச்சி நெடுஞ்சாலை வலப்புறம் கிளை பிரிகிறது. வேடந்தாங்கலுக்குப் போகும் வழி அது. அந்தப் பறவைகள் சரணாலயத்துக்கு முன்னதாகவே உள்ளது இந்த மனிதர்கள் சரணாலயம்.

இதனை தட்சிண சேஷகிரி என்பார்கள். திருமலை வையாவூர் என்பது அழகிய தமிழ்ப் பெயர்.

ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் பழமையான திருக்கோவில் இது. ஆந்திரத் திருப்பதியில் கோயில் கொண்டிருக்கும் பணக்கார பாலாஜி, இங்கே பரம ஏழையாகக் கேட்பாரற்றுக் கிடந்த காலங்கள் உண்டு.

இருபத்தேழு ஆண்டுகளுக்கு முன்னால், ஸீதாராம ஸ்வாமிகள், திருமலைவையாவூரைத் தேடி வந்து, மலைப் படிகளில் ஏறி இந்தத் 'தென் வேங்கடவன்' சந்நிதிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். அப்போது அவரை ஒட்டடைகளும், வௌவால்களுமே வரவேற்றன. கிராமத்து அர்ச்சகர் ஒருவர் ஏதோ பெயரளவுக்குத் தீபம் காட்டிக் கொண்டு, யாராவது பக்தர்கள் வர மாட்டார்களா என்று ஏங்கிக் கிடந்த நாட்கள் அவை.

இன்று —

ஆண்டு முழுவதும் உற்சவங்கள், புண்ணிய தினங்களில் சிறப்புப் பூஜைகள் என்று ஆனந்தமாக விளங்குகிறது திருமலைவையாவூர். அரசின் அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டில் உள்ள கோவில்தான் என்றாலும், ஸீதாராமஸ்வாமிகளின் திருத்தொண்டால் நாளும் புதுமை பெற்று, பக்தி மணம் பரப்பிக் கொண்டிருக்கிறது.

வட வேங்கடவனின் ஆணைகளைச் சிரமேற்கொண்டு, இந்தத் தென் திருப்பதியான திருமலைவையாவூருக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார் சுவாமிகள்.

இங்கு ஏறும் படிகள் 465. இறங்கும் படிகள் 365. இறங்கும் படிகள் சீரமைக்கப் பட வேண்டும். வேறு பல திருப்பணிகளும் நடக்க வேண்டும்.

மலைக்கு ஏறும் வழியில் உள்ள பழைய மண்டபத்தில் ஏழடி உயர ஒற்றைக் கல் வீர ஆஞ்சநேயர் பிரதிஷ்டை செய்யப்படாமல் கிடந்திருக்கிறார். அவரை எடுத்து லாரியில் ஏற்றிப் பதினைந்து நாட்கள் சென்னை, சுற்றுப்புறங்களில் வலம் வந்து, பின்னர் இங்கு மலைக்கு எதிரே பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். தெய்வத் திருவுருவங்களை இப்படி ஊர்வலம் செய்வித்துத்தான் பிரதிஷ்டை செய்ய வேண்டுமாம். இதற்குக்

* உற்சவ பெருமாள்





* சீதாராம ஸ்வாமிகள்



* கோவில் நுழைவாயில்



* சுதர்ஸனர்

'கரிக் கோலம்' என்று சொல்கிறார்கள்.

இதே ஆஞ்சநேயரின் சிறு வடிவம் மலைக் கோவிலில் அழகுற விளங்குகிறது. இங்கே திருத்தலக் கடவுளின் பெயர் ஸ்ரீ வராஹன்.

மலைக் கோவிலிலிருந்து கீழே பார்த்தால் சதுரமாக அழகான படிக்கட்டுக்களுடன் ஒரு திருக்குளம் மரகதத் தகடாகக் காட்சி தரும். வராஹ புஷ்கரணி என்று பெயர். இதில் நீராடி விட்டுத்தான் நேர்த்திக் கடன் செய்கிறவர்கள் படியேறி மேலே வருகிறார்கள். அங்கப் பிரதக்ஷிணம் இங்கேயும் வெகு ஈடுபாட்டுடன் நிறைவேற்றப்படுகிறது.

**வே**ங்கடேச பெருமாளின் சந்நிதியில், வலப்புறத்தில், இருந்த திருக்கோலத்தில் அலர்மேல் மங்கைத் தாயார். இடப்புறத்தில் நின்ற திருக்கோலத்தில் ஸ்ரீ ஆண்டாள் ஸந்நிதிகள். அப்படியே மனம் குவியச் செய்யும் தேஜஸுடன் விளங்குகின்றன.

ஒரே கல்லில் இருபுறமும் இருவேறு தோற்றம் காட்டும் ஸ்ரீ சுதர்ஸன ஆழ்வாரும், ஸ்ரீ யோக நரஸிம்மரும் இரண்டு சந்நிதிகளாக அருள்பாலிப்பது வெகு அற்புதமான கலைத் திறமையின் வெளிப்பாடு.

திருத்தல நாயகனான ஸ்ரீ வராஹர், வேங்கடேசப் பெருமாளாகக் காட்சி தருவது, வடவேங்கடத்திலும், இந்தத் தென் வேங்கடமான திருமலைவையாவூரிலும் மட்டும்தான்.

ஸ்ரீ வராஹர் திருவுருவமும் குறிப்பிடத் தக்க ஒன்றாக விளங்குகிறது. ஆதிசேஷன் வராஹரின் இடப் பாதத்தைத் தாங்க, இடப்புற மடி மீது ஸ்ரீ மகாலக்ஷ்மி வீற்றிருந்து ஸேவை சாதிக்கிறார்கள். இந்த ஸ்ரீ வராஹர் சந்நிதியின் எதிரில்தான் துவஜஸ்தம்பம் இருக்கிறது. சற்றுத் தள்ளி அழகான பீடத்தில் தீபஸ்தம்பமும் நிற்கிறது.

• **ஒ**வ்வோர் ஆண்டும் தமிழ்ப் புத்தாண்டு அன்று இலட்ச தீபம் நிகழ்த்தப் பெறுகிறது. ஆங்கில வருடப் பிறப்பன்று நள்ளிரவு தாண்டியவுடன் படி உற்சவம் நிகழ்த்துகிறார்கள். அறிந்தும் அறியாமலும் அசுத்தப்படக்கூடிய திருக்கோவில் சூழலைத் தூய்மைப்படுத்துவதற்காக, ஐப்பசி மாதம் பௌர்ணமியை ஒட்டிப் பவித்ர உற்சவம் நிகழ்கிறது. ஹோமங்கள் வேதபாராயணங்கள் நிகழ்கின்றன. பௌர்ணமியன்று பூர்ணாஹுதி. இந்த ஆண்டு பவித்ரோற்சவம் அக்டோபர் 30 இல் தொடங்கி நவம்பர் 2ம் தேதி நிறைவடைகிறது.'

**செ**ன்னை நுங்கம்பாக்கத்தில், திருமலைவையாவூர்ப் பெருமாளின் திருத்தல மேம்பாட்டுக்கும், ஆக்கப் பணிகளுக்கும் தம்மை ஈடுபடுத்திக்கொண்டு இயங்கும் அன்பர்களின் திருக்கூட்டமான ஸ்ரீநிவாச



* ஆஞ்சநேயர்

நிகேதனத்திலிருந்து பாதயாத்திரையாக பக்தர்கள் திருமலைவையாவூர் வருகிறார்கள். முதல் ஆண்டில் வெறும் முப்பத்தைந்து பேர்களோடு தொடங்கிய இந்த யாத்திரையில் இந்த ஆண்டு (இது பதினைந்தாவது ஆண்டு) ஐந்நூற்றைம்பது பேர் பங்கேற்றார்கள். பாதயாத்திரைக்கு ஒழுங்குகள், கட்டுப்பாடுகள், விரதங்கள், காப்பு எல்லாம் உண்டு. வாகனங்கள், குடைகள் சமர்ப்பிக்கும் திருப்பணியும் நிகழ்கின்றன.

மலையடிவாரத்தில், நிகேதனத்தார் முயற்சியால், உச்சிஷ்ட கணபதியும் சிறிய கோவிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார்.

திருமலைவையாவூர்த் திருப்பதிக்கு வருவோரில் ஜாதிமத பேதங்கள் இல்லை. ஆன்மிக நெறியை விரிவாக்கும் திருப்பணியில் ஸ்வாமிகளும் ஸ்ரீநிவாஸ நிகேதன அன்பர்களும் வெற்றி கண்டிருக்கிறார்கள் என்பதற்கு, இங்கு வரும் சில பிறமதத்தவர்களே சான்றாக விளங்குகிறார்கள்.

— 'கலசை'

இக்கட்டுரைக்கு யோசனை வழங்கிய வாசகர்: சி. ரெங்கநாதன், வையாவூர்



## பாதி சிகரெட்!



இந்தியாவில் அமெரிக்கத் தூதுவராக இருந்த செஸ்டர் பௌல்ஸ், மறைந்த பிரதமர் நேருவை ஒருமுறை சந்தித்த போது, நேரு சிகரெட் பற்ற வைத்தார். அது பாதி சிகரெட்டாக இருப்பதைப் பார்த்த செஸ்டர் பௌல்ஸ் ஆச்சரியப் பட்டார்.

"இப்படி இரண்டு துண்டாக வெட்டிக் கொண்டால் அன்றாடம் பிடிக்கும் சிகரெட்டின் எண்ணிக்கை பாதியாகக் குறைந்து விடுகிறது" என்றார் நேரு.

ஆதாரம்: செஸ்டர் பௌல்ஸ் எழுதிய 'நான் கண்ட இந்தியா.'

தகவல்: தலைஞாயிறு எஸ். ராஜகணேஷ்.

●

## லதாவின் ரசிகர்கள்:



விஸ்வாஸ் நெரூர்கரும், பிரசாத் சிங்கரும் சேர்ந்து, லதா மங்கேஷ்கரின் பாடல்கள் அடங்கிய பட்டியல் ஒன்றை ஆண்டு வாரியாகத் தயாரித்துள்ளார்கள். 1946 இல் சினிமாவுக்காகப் பாடத் துவங்கிய லதா, இதுவரை 5066 படப் பாடல்கள் பாடியுள்ளார்! 1951 ஆண்டு மட்டும் 225 பாடல்கள் பாடியவர், வரவரக் குறைத்துக் கொண்டேவந்து, 1989 இல் 32 படங்களில்தான் பாடியிருக்கிறார். சென்ற ஆண்டு அவரது பிரபலமான பாடல்கள் "மைனே பியார் கியா" என்ற இளவயதினர் படத்திற்கானவை!

— ராஜீவி நரசிம்மன்.

# பிரமிப்பூட்டிய பேரணி!



* இத்தகைய பேரணிகளால் என்ன பிரயோஜனம்? இத்தனை பணச் செலவும், பயணச் செலவும் அவசியமா? எத்தனை பெட்ரோல் டீசல் வீண்? அந்நியச் செலாவணி நஷ்டம் எவ்வளவு? சென்னை வாழ் மக்களுக்கு எவ்வளவு இடையூறு, துன்பம்?

* இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பேரணி நடத்துகிற எந்த அரசியல் கட்சியுமே திருப்திகரமான பதில் தர முடியாது. அது ஒருபுறமிருந்தாலும், அமைச்சர்களை ஆளுக்கொரு திக்குக்கு அனுப்பி, ஆள் பிடித்து வரச் செய்த தி. மு. க. பேரணியை, அ. தி. மு. க. 'ஜெ' ஆதரவாளர் பேரணி தூக்கிச் சாப்பிட்டு விட்டது என்னவோ உண்மை தான்.

* "ஜெயலலிதாவுக்கு மக்களிடையே உள்ள மகத்தான ஆதரவை இது உணர்த்துகிறது: 'எம். ஜி. ஆரின் மெய்யான வாரிசு ஜெயலலிதாவே' என்று மக்கள் தீர்மானித்திருப்பதை இது உறுதிப்படுத்துகிறது" என்று ராஜீவ் கூறியதை மறுத்துப் பேச 'பாயிண்ட்' ஏதுமில்லை. ஜெயலலிதாவின் அரசியலும் அவரது போக்கும் யாருக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, மக்களிடம் தமக்கு அளவிட முடியாத செல்வாக்கு இருப்பதை உணர்த்தி விட்டார் ஜெ. தொண்டர்களில் பெரும்பாலானோர் தாமாகவே வந்தார்கள் என்பதும், அழைத்து வரப்படவில்லை என்பதும் கவனிக்கத்தக்கது. அதனாலேயேதான் இந்த அபரிமிதக் கூட்டம்.

* கத்திபாரா ஜங்ஷனில் ராஜீவுக்குக் கறுப்புக் கொடி காட்டியவர்கள் பாட்டாளி மக்கள் கட்சியினர். நடந்த மோதலில் அ.தி.மு.க. பிரமுகர் வியாகத் அலிகானுக்கு அடி.

* ஸ்பென்ஸர் அருகே ஊர்வலத்தைப் பார்ப்பதற்காகப் போடப்பட்டிருந்த மேடை பழமேடை. ஆப்பிள், சாத்துக்குடி என்று சரம்சரமாகக் கோத்து மேடையை அலங்கரித்திருந்தார்கள்!

* அலை, அலையாக வந்த மக்கள் கூட்டத்தின் நெரிசலில் மேடையின் முன்பு போடப்பட்டிருந்த தடுப்புக் கட்டைகள் நொறுங்கின. சாலையின் நடுவில் போடப்பட்டிருந்த இரும்பு வேலிகளும் நாசமாயின. பலர் மூர்ச்சையானார்கள்.

* மேடையின் எதிர்ப்புறம் இருந்த கட்டடங்கள், மரங்கள், லைட் கம்பங்கள் ஆகிய எல்லாவற்றிலும் கொத்துக் கொத்தாக மக்கள். 'ஜெ'வின் அறுபது அடி உயரக் கட் அவுட்டின் உச்சியில் கூட அமர்ந்து கொண்டிருந்தார்கள் ரத்தத்தின் ரத்தமான எம். ஜி. ஆர். பக்தர்கள்.



* "அறிவாலயத்தின் உள்ளே சென்ற முதல்வர் கருணாநிதி கூட்ட நெரிசலில் தெருவுக்கே வர முடியாமல் நான்கு மணி நேரமாக அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்" என்ற தகவலைச் சொன்னவர் இளைஞரணிப் பிரமுகர் 'சத்யாலயா' ராமகிருஷ்ணன்.

* சீரணி அரங்கப் பொதுக்கூட்டத்தில் கே.ஏ.கே. பேசும் போது ராஜீவ் காந்தியை ரஜினி காந்தி என்றே குறிப்பிட்டுக் கொண்டிருந்தார்!

* ஜெ. பேச்சில் முரண்பாடுகள் பல இருந்ததை மறுக்க முடியாது. ராஜீவைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு விடுதலைப் புலிகளுக்கு ஆதரவு கொடுக்கா விட்டால் தமிழ் இனமே 'அழிந்து விடும்' என்று சொல்லிவிட்டு அதே மூச்சில் தமிழகத்தில் ஆயுத கலாசாரம் பரவி விட்டது என்றும் குற்றம் சாட்டினார்!

* ராஜீவ் பேசும் போது, எம். ஜி. ஆர். சிலையைத் திறந்து வைக்கத் தம்மை அழைத்ததற்கு ஜெயலலிதாவுக்குத் 'தாங்க்யூ' கூற, 'ஓஹோ, ராஜீவ் பேசி முடித்து விட்டார் போலிருக்கிறது' என்று கூட்டம் கலைய ஆரம்பித்து விட்டது! ராஜீவ் 'இனிமேல்தான் பேசப் போகிறேன்' என்றார், சற்றுப் பரிதாபமாக.

* வங்கக் கடலுக்குப் போட்டியாக மக்கள் கடலைச் சென்னையில் சங்கமிக்க வைத்து ஒரு கலக்குக் கலக்கி விட்டார்' ஜெயலலிதா. சென்னையை மட்டுமா? தி. மு. க. தலைமையையும்தான்!

— ப்ரியன்

படங்கள்: . சுபா

---

டாக்டர் பதில்கள்:

# வாழைக்காய் வாயுவை உண்டாக்குமா?

Q எம். பரமசிவம், தஞ்சாவூர் — 5.

**உடலில் வாயுக் கோளாறு, வாயு பிடித்துக் கொள்ளுகிறது என்று சொல்லக் கேட்கிறோம். ஒரு சித்த வைத்திய மருந்து விளம்பரத்தில், உடலில் வரும் அத்தனை நோய்களுக்கும் வாயுதான் காரணம் என்று குறிப்பிட்டிருந்தார்கள். உருளைக் கிழங்கு, வாழைக்காய் போன்ற காய்கறிகள் வாயுவை உண்டாக்கக் கூடியது என்றும், இதைப் போக்கப் பெருங்காயம், பூண்டு முதலியவற்றை அதிக அளவில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் வீட்டில் பெரியவர்கள் கூறுகிறார்கள். மருத்துவ ரீதியில் வாயுக் கோளாறு எவ்வாறு தோன்றுகிறது? அதைப் போக்க வழி என்ன?**




**OO டாக்டர் பி. ஆர். சுப்பிரமணியம், சென்னை — 18:**

OO ஆங்கில வைத்திய முறைப்படி, வயிற்றில் உண்டாகும் வாயுதான் வலிக்குக் காரணம் என்று நாங்கள் சொல்லுவதில்லை. விஷமான சத்துக்கள் உடலில் சேர்வதால், தசைகள் பாதிக்கப்பட்டு வலி உண்டாகிறது. 'மயால்ஜியா' அல்லது 'மஸ்க்யுலர் பெயின்' என்பார்கள் இதை. இதைத்தான் வாயு என்கிறார்கள்! வாயு என்று நாங்கள் சொல்லுவது, சரியாக உணவு ஜீரணிக்கப்படாமல், குடலில் வாயு சேர்ந்து, வயிற்றில் உப்புசம் வரும் நிலைமை. இதை flatulence என்போம். உணவு ஜீரணம் ஆகாததற்குப் பித்தப் பை கோளாறு ஒரு காரணம். வாயு வயிற்றில் சேர்ந்து ஏப்பமும் வரும். ஜீரணம் முறையாக ஆகி, பித்தப்பை கோளாறு சரி செய்யப்பட்டால் வாயுத் தொந்தரவு நிற்கும். (உங்களுக்குத் தெரியுமோ? அயர்லாந்தில் உருளைக் கிழங்குதான் முக்கிய உணவு!)

தொகுப்பு: **எஸ். வி. என்.**



* திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சுவாமி படம்...

# நெஞ்சை அள்ளும் தஞ்சை ஓவியங்கள்

அபூர்வமான, பழைய காலத்து ஓவியங்கள் எங்கு கிடைத்தாலும், உடனே வாங்கி விடுவார் மீனா முத்தையா. ஓவியம் வரைவதிலும் இவர் ஆர்வம் படைத்தவர். சுமார் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள், சென்னை தேவராஜ் முதலி தெருவுக்கு ஓவியம் சம்பந்தப்பட்ட உபகரணங்களை வாங்கச் சென்றார் மீனா. அப்போதுதான் சில பழைய தஞ்சை ஓவியங்கள் அவர் கண்ணில் பட்டன. வெண்ணெய் திருடும் கண்ணன், ஆலிலை கிருஷ்ணர், ராமர் பட்டாபிஷேகம், சயனித்திருக்கும் ரங்கநாதர் என்று ஏராளமான ஓவியங்கள், பிரேம் போட்டு மாட்டப்பட்டு, விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தன. மீனா முத்தையாவின் மனத்தில் ஓர் உந்துதல் எழுந்தது. 'நாமும் தஞ்சை ஓவியங்கள் வரையக் கற்றுக் கொண்டால் என்ன...?'

கடைக்காரரிடம் இதுபோன்ற ஓவியங்கள் வரையத் தாம் விரும்புவதாகவும் பயிற்சி கொடுக்கும் ஓவியர்கள் யாராவது இருக்கிறார்களா? என்றும் ஆர்வத்துடன் விசாரித்தார்.

கடைக்காரரோ, ''இப்போ யாரம்மா இதெல்லாம் கற்றுக் கொடுப்பாங்க. இந்த வகையான கலையே மறைஞ்சுட்டு இருக்கு. இன்னும் சில வருடங்களில், இது போன்ற ஓவியங்களையே பார்க்க முடியாது'' என்று சொல்லி விட்டார்!

மீனா முத்தையாவுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தில் அவர் முகம் வாடிப் போனதைப் பார்த்த கடைக்காரர் ''இந்த மாதிரி ஓவியங்கள் வரையும் ஒரு பெரியவர் இருக்கிறார்.



* ...இதனைத் தஞ்சை ஓவியமாக வடித்த தாமோதரன்.

அவரை வேண்டுமானால் கேட்டுப் பார்க்கிறேன்'' என்று சமாதானமாகச் சொல்லி வைத்தார்.

அடுத்த இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு வயதான தம்பதி மீனாவைத் தேடி வந்தார்கள். தேவராஜ் முதலி தெரு கடைக்காரர் அனுப்பி வைத்ததாகக் கூறினார்கள். மீனாவுக்குக் கனவு நனவான சந்தோஷம். அத் தம்பதியைத் தம் இல்லத்திலேயே தங்க வைத்து, அடுத்த இரண்டு வருடங்கள் கடுமையாய்ப் பயிற்சி எடுத்துக் கொண்டார். பல கண்காட்சிகள் நடத்தும் அளவுக்கு வளர்ந்தார்.

அந்தப் பெரியவர் பெயர் கோவிந்த ராமானுஜம். பரம்பரையாகவே தஞ்சை ஓவியங்கள் வரையும் குடும்பத்தைச் சேர்ந்தவர் அவர். ஒரு திறமை மிக்க மாணவி கிடைத்ததற்காக மகிழ்ந்தார்.

மாணவி மீனாவோ, அழியும் இந்தப்

புராதனக் கலையைப் புனருத்தாரணம் செய்ய வேண்டுமென்றால், அதை மேலும் பலருக்குக் கற்றுத் தர வேண்டும் என்று ஆர்வம் கொண்டார்.

குருவைக் கலந்தாலோசித்தார். செட்டி நாட்டு அரசர்கள் பரம்பரையைச் சேர்ந்த மீனா முத்தையா, தமது செல்வத்தையும் செல்வாக்கையும் கணிசமாக வழங்க, "குமார ராஜா முத்தையா புராதனக் கலை மற்றும், கைத்தொழில் பள்ளி'' துவங்கப் பட்டது.

மூன்று வருடப் பாடத் திட்டம். தஞ்சை ஓவியங்களும், ஐம்பொன் சிலைகள் வடிக்கும் கலையும் கற்றுத் தருகிறார்கள்.

ஒரு கோர்ஸுக்குப் பதினைந்து பேர்தான் சேர்த்துக் கொள்கிறார்கள். இந்தப் பதினைந்து பேருக்கும் மூன்று வருடங்களுக்குச் சாப்பாடு, தங்கும் இடம் இலவசம். இது வரை, கிட்டத்தட்ட 75 பேருக்கு மேல் கோர்ஸ் முடித்து விட்டுச் சென்று, வெவ்வேறு இடங்களில் வேரூன்றி உள்ளனர். அவர்களில் பலர், பல இடங்களில் தஞ்சை ஓவியங்கள் கண்காட்சி நடத்தி, பல்லாயிரக் கணக்கில் சம்பாதித்தும் இருக்கின்றனர்.



* மீனா முத்தையா

பிரபல ஓட்டல்கள், கம்பெனிகள் போன்றவற்றின் வரவேற்பறையில் தஞ்சை அள்ளும் தஞ்சை ஓவியங்கள் இன்று காட்சி அளிக்கின்றன. ஏராளமான மக்கள் இந்த ஓவியக் கலையைக் கற்க விரும்பி குமார ராஜா முத்தையா பள்ளிக்கு வருகிறார்கள். இதனால் ஆறு மாத குறுகிய கால கோர்ஸ் ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

மனப்பூர்வமான ஈடுபாட்டுடன் கலைப் பணியில் ஈடுபட்டுள்ள மீனா முத்தையாவிடம் பேசினோம்:

● "தஞ்சை ஓவியங்களின் வரலாற்றுப் பின்னணி என்ன?''

"முகலாயர் ஆட்சிக் காலத்தில் இந்து மதம் சம்பந்தப்பட்ட கலைகளைப் பயின்ற கலைஞர்கள் எதிர்ப்பைச் சந்தித்தனர். அப்போது பல சிற்பிகளும், ஓவியர்களும் வடக்கே இருந்து வந்து விஜயநகர சாம்ராஜ்யத்தில் வசிக்க ஆரம்பித்தார்கள். விஜய நகர சாம்ராஜ்யம், தெற்கே, மைசூர், தஞ்சாவூர் என்று வியாபித்த போது அந்த ஓவியர்களும் இந்த ஊர்களுக்கு வந்து சேர்ந்தனர். தஞ்சைக்கு வந்த ஓவியர்கள் நாயக்க மன்னர்களின் உருவங்கள், தங்களை ஆதரித்தவர்களின் ஓவியங்கள், தெய்வப் படங்கள் என்று நூற்றுக்கணக்கில் வரைந்து தள்ளினர். பெரும்பாலான தெய்வப் படங்கள், வைஷ்ணவ பின்னணியுடையவை. இதற்குக் காரணம் ஆட்சியாளர்கள் வைஷ்ணவ சம்பிரதாயத்தைக் கடைபிடித்ததுதான்."

● "தஞ்சை ஓவியங்களின் சிறப்பு என்ன?''

"தஞ்சை ஓவியங்களை மரப் பலகையில் தான் வரைய வேண்டும். அந்த மரப் பலகையை நன்கு இழைத்து மென்மையாக்கி, (இப்போது மென்மையான பிளைவுட் வருவதால் சௌகரியமாக இருக்கிறது) அதில் தெய்வ உருவத்தைக் கோட்டுச் சித்திரமாக வரைந்து கொள்ள வேண்டும். அப்புறம் பிரெஞ்ச் சாக் பவுடர், மயில் துத்தம், வஜ்ஜிரம் ஆகியவற்றைக் கொண்டு மக்கு என்ற கலவையைத் தயாரிக்க வேண்டும். ஓவியத்தின் முகம், கை, கால், கழுத்தில் போடப்பட்டிருக்கும் மலர் மாலை ஆகிய இடங்களை விடுத்து மற்ற இடங்களில் மக்கு போட வேண்டியிருக்கும். 'மக்'கை அப்பிய பிறகு அது நன்கு காய வேண்டும். பின்னர் மக்கின் மீது வளைவுகள், நெளிவுகளுக்கேற்ப தங்க ரேக்குகளைக் கத்தரித்து ஒட்ட வேண்டும். முன்காலத்தில் ஓவியர்களே



* பயிற்சி வகுப்பு

தங்க ரேக்குகளைச் (தங்கத்தை மிக மிக மெலிதான தகடுகளாக உருவாக்கிக் கொள்வது) செய்து கொண்டிருந்தார்கள். ஒட்டகத் தோல்களின் இடையில் தங்கத்தை வைத்து நன்றாக அடித்து வேண்டிய அளவில் மெலிதான தகடுகளாகச் செய்து கொள்ளலாம்.

"தங்க ரேக்கு செய்வதே மிக அரிய கலை. சென்னையில் இப்போது ஒரே ஒருவர்தான் இதைச் செய்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

''தங்க ரேக்குகளை ஒட்டிய பின் முகம், கை, கால்களுக்கு வர்ணம் தீட்ட வேண்டும். பின்னர் ஆங்காங்கே வர்ண வேறுபாடுகள் கொடுத்து, உயிரூட்ட வேண்டும். தகதகக்கும் இந்த ஓவியங்களில், கல் வைத்துச் செய்வது இன்னொரு சிறப்பம்சம். கிரீடம், இடுப்புப் பகுதி போன்றவற்றில் சிவப்பு, வெள்ளைக் கற்களைப் பதித்தால் ஓவியம் பிரமாதமாக இருக்கும். கற்கள் பதிப்பதெனில், மக்கு வைத்தபின் ரேக்குகளை ஒட்டுவதற்கு முன்பாகவே பதித்துக் கொள்ள வேண்டும்.''

● ''இந்த அற்புதமான கலை இடையில் மறையத் தொடங்கியது ஏன்?''

''இதுபோன்ற ஓவியங்கள் வரைவதற்குக் கால அவகாசம் நிறையத் தேவை. பணமும் செலவாகும். அதனால் போஷிப்பவர்கள் இருந்தாலொழிய இதைத் தொழிலாகக் கொண்டு கலைஞர்கள் பிழைப்பு நடத்துவது கஷ்டம். இதே காரணத்தால்தான் தங்கள் சந்ததிகளுக்கு இக் கலைஞர்கள் இதனைச் சொல்லித் தருவதில்லை. நல்லவேளையாக, விஞ்ஞான முன்னேற்றத்தின் பயனாக பல வேலைகள் இப்போது சுலபமாக்கப்பட்டிருக்கின்றன. அப்படியும் 60" X 40" ஓவியத்தை முடிக்க கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் ஆகின்றன.''

● ''கண்காட்சிகளில் விற்கப்படும் தஞ்சை ஓவியங்கள் நீங்கள் சொல்லும் முறைப்படி வரையப்பட்டவைதானா?''

''இதற்கு இப்போது ஒரு மவுசு வந்துவிட்ட காரணத்தால் போலிகளும் உலவத் துவங்கி விட்டன. தங்க ரேக்குகளுக்குப் பதில் தங்க ஜிகினா பேப்பர் ஒட்டிய ஓவியங்கள் தயாராகின்றன! ஆனால் மக்களுக்கு அதிக விலைக்கு விற்கப்படுகின்றன! வாங்குவோர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.''

● ''உங்கள் ஓவியப் பள்ளியை இன்னமும் விரிவுபடுத்தும் திட்டமிருக்கிறதா?''

''அத்தகைய எண்ணம் அடிக்கடி வருகின்றது. ஆனால் இன்னமும் பல நூறு பேர்களுக்குப் பயிற்சி கொடுத்துக் கலையை வியாபாரமாக்குவது மட்டுமல்லாமல், நீர்த்துப் போவதற்கும் நானே காரணமாகி விடுவேனோ என்ற பயமும் கூடவே தோன்றுகிறது. ஆகையால் விரிவாக்கம் குறித்து முடிவெடுக்கவில்லை.''

— ப்ரியன்.

அட்டை வண்ணப்படம்:
**வி. கே. ராஜாமணி.**

# கருணாநிதிக்குச் சில யோசனைகள்!



**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**

○ '''ஜெயலலிதாவுக்குச் சில ஆலோசனைகள்' என்ற தலைப்பில் ரூ. 50 முதல் பரிசும், பிரசுரமாகும் சிந்தனைச் சிதறல்களுக்கு ஆறுதல் பரிசும் அளித்த நீங்கள், 'கருணாநிதிக்குச் சில யோசனைகள்' என்ற தலைப்பிலும் கட்டுரை எழுத எங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்'' என்று யோசனை தெரிவித்திருப்பவர்: கவிதா, பி. ஏ., முதலாம் ஆண்டு, ராணிமேரி கல்லூரி, சென்னை — 5.

கல்லூரி விலாசம் குறிப்பிட்டு ஒரு பக்கக் கட்டுரை எழுதக் கடைசி தேதி: 27.10.90.

நினைவிருக்கட்டும்! பொன்விழா மேடையில் ரூ. 2500/- சிறப்புப் பரிசு பெறும் வாய்ப்பும் ஒரு மாணவருக்கு உண்டு.

# மாணவர் கட்டுரைப் போட்டி





# தீபாவளியின் தனிச்சிறப்பு

புஸ்தகமென்றால் கீதைக்குத்தான் முதலிடம், பண்டிகையென்றால் தீபாவளிக்குத்தான் முதலிடம் என்று ஏன் இருக்கணும் என்று ரொம்ப நாள் யோசித்துக் கொண்டிருந்தேன். அப்புறம் ஒருநாள் சட்டென்று புரிந்தது. கொஞ்சங்கூட எதிர்பார்க்க முடியாத ஒரு ஸந்தர்ப்பத்தில், எல்லாம் எதிர்மாறாக இருக்கிற ஸந்தர்ப்பத்தில் நல்லதாக ஒன்று உண்டாயிற்று என்றால் அதற்கு மற்ற எல்லாவற்றையும் விட அதிகமான ஒரு சக்தி, பெருமை, ஸ்தானம் இருக்கத்தான் செய்கிறது. பகவத் கீதை, தீபாவளி இரண்டுமே இப்படிப் பிறந்தவைதான்.

பகவத் கீதை என்பது ஞானோபதேசப் புஸ்தகம். ஸாதாரணமாக ஞானோபதேசம் எப்படிப்பட்ட ஸந்தர்ப்பத்தில் — 'சூழ்நிலை' என்று அழகாகச் சொல்கிறார்களே, அதில் — செய்வது வழக்கம்? அந்த இடம் நல்ல நிசப்தமாக இருக்கணும். சோலையும் நதியுமாகச் சாந்தமாக இருக்கணும் — 'ஸ்தல ரமணீயம்', 'ஜல ரமணீயம்' என்று இவற்றைச் சொல்வது. குரு நல்ல விருத்தராக, ரிஷியாக, அல்லது ஸந்நியாஸியாக இருப்பார். சிஷ்யன் அவரை விட வயஸில் ரொம்பச் சின்னவனாக அடங்கிப் பணிவிடை செய்பவனாயிருப்பான்.

ஆனால் கீதை விஷயத்தில் எப்படி இருக்கிறது? எல்லாம் வித்யாஸம்! உபதேசம் பண்ணினவர் ரிஷியுமில்லை, ஸந்நியாஸியுமில்லை. ராஜாங்க ஸமாசாரமாக இல்லாத டிப்ளமஸியெல்லாம் பண்ணினவர். உபதேசம் வாங்கிக் கொண்டவனோ அவருக்கு ஸமவயஸுக்கார நண்பன். உபதேசம் நடந்த சூழ்நிலையைப் பார்த்தால் — நிசப்தமா, சாந்தியா, ரமணீயமா? அத்தனைக்கும் ஆப்போஸிட்டாக இருக்கிறது! பயங்கரமான யுத்த களம். அப்படிப்பட்ட ஸமயத்தில், தலையும், காலும், உயிரும் பெரிசில்லை; தத்வந்தான் பெரிசு என்று ஒருத்தன் உபதேசம் பண்ண, இன்னொருத்தன் கேட்டுக் கொண்டானே, அந்த விசேஷம் தான் கீதையை எல்லாப் புஸ்தகங்களுக்கும் மேலே உசத்தி வைத்திருக்கிறது.

அப்படியேதான் தீபாவளியும். ஒரு அஸுரன் கொஞ்சங்கூட எதிர்பார்க்க முடியாத அன்புள்ளத்தோடு, தனக்குப் பிராணன் போகிற அவஸ்தை நிலையில், லோகமெல்லாம் தன் சாவைக் கொண்டாடி ஸந்தோஷமாகப் பண்டிகை நடத்த வேண்டும் என்று நம்ப முடியாத ஒரு வரத்தை வாங்கிக் கொண்ட விசேஷம்தான் தீபாவளியை எல்லாப் பண்டிகைகளுக்கும் மேலே தூக்கி வைத்திருக்கிறது. நரகாஸுரன் வேண்டிக் கொண்டதாக ஒரு 'வெர்ஷன்'. அவனுடைய தாயாரான பூமாதேவிதான் இப்படி வரம் கேட்டு வாங்கிக் கொண்டாளென்று இன்னொரு 'வெர்ஷன்'. அம்மாக்காரி அப்படிக் கேட்டாள் என்பதே நம் மனஸை இன்னும் ஆழமாகத் தொடுகிறது. புத்ர சோகத்தை விடப் பெரிய சோகமில்லை. அதிலும் வியாதி வக்கையில் பிள்ளை போகாமல் ஒருவன் அடித்துப் போட்டுச் செத்துப் போனான் என்றால் இன்னும் வயிறு பற்றிக் கொண்டு எரியும். அடித்துப் போட்டவனைச் சபிக்கத்தான் தோன்றும். ஆனால் அப்படிப்பட்ட ஸந்தர்ப்பத்திலேயே இந்த அம்மா மட்டும் புத்ரனை ஸம்ஹாரம் பண்ணினவனிடம் போய் நமஸ்காரம் பண்ணி ஸ்தோத்ரம் செய்தாள். "ஒவ்வொரு ஆண்டும் இன்றைய தினத்தில் லோகம் பூராவும் பண்டிகை கொண்டாடிண்டு நன்னாயிருக்கிறதற்கு, நீ வரம் தரணும்" என்று வேண்டிக் கொண்டாள். தன்னுடைய வயிற்றில் பிறந்த பிள்ளை போன ஸமயத்தில் லோகத்துக்கெல்லாம் அவள் அம்மாவாகி, அந்த நாளில் எல்லாரும் தைல ஸ்நானம் பண்ணி, புது வஸ்திரம் கட்டிக் கொண்டு, பக்ஷ்ய போஜ்யங்களோடு விருந்து சாப்பிட்டு ஸந்தோஷமாகப் பண்டிகை கொண்டாட வேண்டுமென்று வரம் கேட்ட விசேஷந்தான் தீபாவளிக்கு இத்தனை மஹிமை உண்டாயிருப்பது.

உயிர் போனாலும் தத்வம் பெரிசு என்று கீதை நமக்குக் காட்டுகிற மாதிரி, தனக்கு எத்தனை துக்கம் வந்தாலும் லோகக்ஷேமத்தையே நினைக்கணுமென்பதுதான் தீபாவளி நமக்குத் தருகிற போதனை.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# என் தாத்தா – இந்த வயதிலும் என்ன துடிப்பு !

தாத்தாவுக்கு வயதாகிக் கொண்டே போகிறது. உடம்போட செயலாற்றல் குறைந்து கொண்டே வருகிறது. அவர் இப்போது குறைவாகச் சாப்பிடுகிறார்.

**அவர் தனது ஊட்டச்சத்துக்களை காம்ப்ளான் மூலம் நிறைவு செய்கிறார்.**

எளிதாக ஜீரணிக்கக்கூடிய காம்ப்ளான், உங்கள் உடலுக்குத் தேவையான 23 ஊட்டச் சத்துணவுகளைக் கொண்டதாகும். தேய்ந்த உடல் திசுக்களைப் புதுப்பிப்பதற்கான பால் புரதம், சக்தி பெறுவதற்கான கார்போஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச் சத்து, உடல் நலத்திற்கான வைட்டமின் மற்றும் தாதுக்கள் ஆகியவற்றை கொண்டதாகும். காம்ப்ளான்.




**23**

மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

## காம்ப்ளான்®

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/47/213/TM



# தங்கம் பெற்ற ரத்தினம்!

**பெய்ஜிங்கில் தங்கம் பெற்ற இந்தியக் கபடி அணியின் துணை கேப்டன் ராஜரத்தினத்துடன் ஒரு சந்திப்பு:**

''எந்தெந்த நாட்டு அணிகள் உங்களுடன் விளையாடின?''

''பாகிஸ்தான், பங்களாதேஷ், நேபாளம், ஜப்பான், சீனா ஆகிய ஐந்து நாட்டு அணிகளுடன் ஆடி ஜெயித்தோம். ஜப்பான் சில ஆண்டுகளாகவே கபடியில் ஆர்வம் காட்டி வருகிறது. சீனா, ஆசிய விளையாட்டில் கபடியைச் சேர்த்த பின்னர்தான் கபடி ஆட ஆரம்பித்தது. இந்தியா, பாக், பங்களாதேஷ், நேபாளம் ஆகிய நான்கு நாடுகளிலுமே, தொன்று தொட்டு ஆடப்பட்டுவரும் விளையாட்டு கபடி. இந்தியாவில் தமிழகத்திற்கு அடுத்தபடி மகாராஷ்டிராவில்தான் கபடிக்கு மவுசு அதிகம்.''

''இந்திய அணியின் ஆட்டம் பற்றி?''

''இந்திய அணிக்குக் கடந்த இரண்டரை ஆண்டு காலமாகக் கல்கத்தா, பாடியாலா, பெங்களூர், அகமதாபாத், சிம்லா, டெல்லி என்று பல ஊர்களிலும் பயிற்சி முகாம்கள் நடத்தப்பட்டன. இந்திய அணி பல்வேறு சமயங்களிலும் அண்டை நாடுகளுடன் ஆடிய கபடி மாட்சுகளின் வீடியோவைப் பார்த்து, அவர்களுடைய டெக்னிக்குகளை அலசி, அதற்கேற்ப நம் அணி தயார்ப்படுத்தப்பட்டது. நம் அணியின் டீம் ஸ்பிரிட் அற்புதமாய் இருந்தது. அதுதானே வெற்றிக்கு அடிப்படை!''

''மற்ற அணிகளின் ஆட்டம் பற்றிக் கூறுங்களேன்?''

''ஜப்பான், நேபாளம், பங்களாதேஷ் அணிகளைச் சுலபமாய் ஜெயித்து விட்டோம். மல்யுத்த ஸ்டைலில் ஆடிய சீனாவைச் சிரமப்பட்டுச் சமாளித்தோம். பாகிஸ்தான் அணியிடம்தான் ஏக எதிர்பார்ப்புகளுடன் ஆட ஆரம்பித்தோம். புதிய சில டெக்னிக்குகளைக் கையாண்டோம். வெற்றி பெற்றோம்.''

'''முதல் தடவை என்பதால் சுலபமாய்த் தங்கப் பதக்கம் கிடைத்து விட்டது; சில வருடங்களில், கபடியும் 'ஹாக்கி' கதை போல ஆகி விடும்' என்ற விமர்சனம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''இது நம்முடைய பாரம்பரிய விளையாட்டு. எப்படியும் நாம் ஜெயித்தே ஆக வேண்டும் என்கிற வெறி, ஒவ்வோர் ஆட்டக்காரருக்கும் இருந்தது. இந்தியாவில் நாங்கள் பழகியது போலவே அங்கே கபடி ஆடுகளம் அமைக்கப்பட்டிருந்தது ஒரு வசதி. இதே 'டெம்போ' தொடருமானால் இன்னும் எத்தனை வருடங்கள் ஆனாலும் தங்கம் நமக்குத்தான்!''

''உங்களைப் பற்றிச் சொல்லுங்களேன்...''

''எனக்கு வயது முப்பத்தொன்று. கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்தவன். எங்கள் குடும்பமே கபடிக்குக் கடமைப்பட்டிருக்கிறது. காரணம், கபடி மூலமாய் ஸ்போர்ட்ஸ் கோட்டாவில், பல்வேறு நிறுவனங்களிலும் எங்கள் குடும்பத்தவர் பலர் வேலைக்குச் சேர்ந்து, அந்தந்த நிறுவனங்களுக்காக விளையாடி வருகிறார்கள். நான் முன்பு மின் வாரியத்தில் இருந்தேன். ஐ.சி.எஃப்.பில் கடந்த ஆறு ஆண்டுகளாய்ப் பணிபுரிகிறேன். இந்திய ரயில்வே கபடி அணிக்குக் கேப்டன் நான்தான். ஆசிய விளையாட்டு டீமில் நான் துணை காப்டன். பஞ்சாபைச் சேர்ந்த ஹர்தீப் சிங் கேப்டன்.''

சந்திப்பு: **மௌனி**



கல்கி

1990 அக்டோபர் 21
மலர் : 49 இதழ் 12
பிரமோதூத ஐப்பசி 4



# மக்களின் தீர்ப்பைக் குப்பையிலே போடு!

கர்நாடகத்தில் ராஜீவ் நடந்து கொண்ட விதமும் சரி, முதல்வர் பாட்டீல் நடந்து கொண்ட முறையும் சரி, ஆளுனரின் போக்கும் சரி, கடைசியாக மத்திய அரசின் நடவடிக்கையும் சரி, எல்லாமே 'மக்களின் தீர்ப்பைக் குப்பையிலே போடு' என்ற கதையாகத்தான் இருக்கின்றன. இதுதான் இவர்கள் இந்நாட்டு மன்னர்களுக்கும் ஜனநாயக மரபுகளுக்கும் அளிக்கும் மதிப்பு!

பொதுத் தேர்தலில் பலமான அடி வாங்கிக் கொண்ட ராஜீவ், கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது அடக்கத்தைப் பெற்றிருப்பார் என்றுதான் எதிர்பார்த்தோம். ஆனால் அவர் ஆணவம் பன்மடங்கு பெருகித்தான் உள்ளதே தவிர, லவலேசமும் குறையவில்லை. கர்நாடகத்தில் இ. காங்கிரஸ் பெற்ற பெருவெற்றிக்கு மூலகாரணமே ராஜீவ் அல்ல; வீரேந்திர பாட்டீல்தான். இதை உணர்ந்து முதல்வரைப் பூரண சுதந்திரத்துடன் இயங்க விடுவதற்குப் பதிலாக, அவரைப் பலவிதங்களிலும் அவமதித்தார் ராஜீவ். பிரதமர் பதவியை இழந்து, கோபமும் தாபமும் அடைந்து, தாழ்வு மனப்பான்மையுடன் போராடிக் கொண்டிருந்ததாலோ என்னவோ, எல்லோரும் தம் முன் கைகட்டி நிற்க வேண்டும் என்று முன்னிலும் அதிகமாக எதிர்பார்த்தார். ஒவ்வொரு விஷயத்துக்கும் மாநில முதல்வர் தில்லிக்குக் காவடி தூக்க வேண்டியதாயிற்று. அப்படிச் சென்றவருக்கு அங்கே மரியாதையும் கிடைக்கவில்லை. முதல்வரை நாள் கணக்கில் காக்க வைப்பது, பார்க்காமலே திருப்பி அனுப்புவது, போன்ற நாடகங்கள் தொடர்ந்தன.

செல்வாக்குப் பெற்ற ஒருவர், தொடர்ந்து சில காலம் ஆட்சியில் நீடித்தால், தாயைப் போலவே ராஜீவாலும் அதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. பாட்டீலைப் பதவி இறக்கம் செய்யச் சந்தர்ப்பம் எதிர்பார்த்திருந்தவருக்கு, கர்நாடகத்தில் நடந்த இனக்கலவரங்களும், பாட்டீல் நோய்ப் படுக்கையில் விழுந்ததும் கைகொடுத்தன. இதுதான் சமயம் என்று, "பாட்டீல் விலகிக் கொள்வார்" எனப் பத்திரிகை நிருபர்களிடம் அறிவித்து விட்டார் ராஜீவ். முன்னம் ஒரு பத்திரிகைக் கூட்டத்தில் ஏ. பி. வெங்கடேஸ்வரன் டிஸ்மிஸ் செய்யப்பட்டதாக ராஜீவ் அறிவித்ததைவிடக் கேவலமான, நாகரிகமற்ற, ஆணவத்தைக் காட்டுகிற செயல் இது.

வீரேந்திர பாட்டீல், தாம் ராஜினாமா செய்ய முடியாது என்றும், தம்மைப் பதவி நீக்கம் செய்வதானாலும் அதை முறைப்படி செய்ய வேண்டும் என்றும் கூறிய அளவில் சரி. ஜனநாயக மரபுகளுக்கு ஏற்ப சட்டசபையைக் கூட்டி, அங்கேதான் அவருக்கு மெஜாரிட்டி ஆதரவு இருக்கிறதா, இல்லையா என்பதைத் தீர்மானித்திருக்க வேண்டும். சகட்டுமேனிக்கு ஒரு கட்சித் தலைவர், மாநில முதல்வரை டிஸ்மிஸ் செய்வது முறையே அல்ல.






ஆனால் பாட்டில் இவ்வாறு எதிர்ப்புத் தெரிவித்ததுடன் நில்லாது, சட்டசபையைக் கூட்டத் தயங்கி, சட்டசபையைக் கலைக்குமாறும், ஜனாதிபதி ஆட்சி கொண்டு வருமாறும் ஆளுனருக்கு ஆலோசனை வழங்கியது சரியல்ல. சட்டசபையை அவர் சந்திக்க அஞ்சியதற்குக் காரணம், இது ராஜீவுக்குக் கௌரவப் பிரச்னையாகி விட்டதால் அவர் எம்.எல்.ஏக்களிடையே சாம, தான, பேத, தண்டப் பிரயோகங்கள் செய்வார் என்று எதிர்பார்த்ததாக இருக்கலாம்.

முதல்வரின் பொரிக எத்தகையதாக இருந்தாலும், 'சட்டசபையைச் சந்தியுங்கள்' என்றுதான் ஆளுனர் முதல்வருக்கு அறிவுரை வழங்கியிருக்க வேண்டும். ஆனால் கர்நாடகத்தில் ஜனாதிபதி ஆட்சி கொண்டு வருமாறு அவசரம் அவசரமாக ஆளுனர் மத்திய அரசுக்குச் பொரிக செய்யப் போக, மத்திய அரசோ, 'எங்கே, எங்கே?' என்று காத்திருந்தது போல் நடவடிக்கை எடுத்துவிட்டது. கர்நாடகம், ஜனாதிபதி ஆட்சியின் கீழ் வந்துவிட்டது. இச்செயல்கள் எல்லாமே ஜனநாயக மரபுகளுக்கும் தார்மிக நெறிகளுக்கும் முரணானவை. சட்டசபையின் செயல்பாடு தாற்காலிகமாகவே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது என்பது வெறும் கண் துடைப்பாக இல்லாதிருந்தால் சற்றே ஆறுதல்.

சட்ட ஒழுங்குப் பிரச்னை, முதல்வர் நோய்வாய்ப்பட்டது ஆகியன எல்லாத் தரப்பிலும் காரணங்களாக ஒப்புக்குக் கூறப்படுகின்றன. எந்த மாநிலத்தில்தான் சட்ட ஒழுங்கு வாழ்கிறது? நேருஜியும் எம். ஜி. ஆரும் நோயுடன் போராடியபடியே கடைசிவரை பிரதமராகவும், முதல்வராகவும் நீடிக்கவில்லையா, என்ன?

தனி நபர்களின் ஆணவம், 'நீ உயர்ந்தவனா? நானா? பார்க்கலாம், ஒருகை!' என்ற சவால் போக்குத்தான் ஒருவரை ஒருவர் கவிழ்க்கச் சதிகளை ஒன்றன் பின் ஒன்றாகத் தொடரச் செய்தது. இதற்கிடையில், மக்களின் தீர்ப்புப் புறக்கணிக்கப்பட்டு, ஜனநாயகம் கேலிக் கூத்தாகியிருக்கிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# கிண்டலின் செல்வன்!

''சினிமாவில் நடித்துப் பிரபலமடைந்த நீங்களே 'சரஸ்வதியின் செல்வன்' டெலிவிஷன் தொடரில் சினிமாக்காரர்களை இப்படிக் கிண்டலடிக்கிறீர்களே! இது சரியா?'' என்று சோவிடம் கேட்டோம்.

''ஏன் அதில் என்ன தப்பு? சினிமாக்காரனாய் இருந்தால், சினிமாவைக் கிண்டல் செய்யக் கூடாதா?'' என்று நம்மை மடக்கினார்.

தொடர்ந்து சொன்னார்: ''உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? 67 — 68 இல் நான் இதே விஷயத்தை மேடை நாடகமாய்ப் போட்டிருக்கிறேன். அப்போதைய சூழ்நிலைக்குத் தக்கபடி, அந்த நாடகத்தில் காட்சிகளையும், வசனங்களையும் அமைத்திருந்தேன்: மிக நீண்ட வசனங்களைப் பேசுகிற கதாபாத்திரங்கள், படம் முழுக்க இருமுகிற வயதான கேரக்டர், இறந்து போன அம்மாவின் போட்டோவைப் பார்த்துக் கதறி அழும் ஹீரோ, என்று பல கிண்டலான விஷயங்கள். ஆனால் அப்போது உங்கள் கேள்வியை யாரும் கேட்கவில்லை. நன்றாக ரசித்தார்கள். இப்போதுள்ள சூழ்நிலையைப் பிரதிபலிக்கும்படியாய், டி.வி. தொடரை அமைத்துள்ளேன்.

சினிமாவைக் கிண்டல் செய்து சினிமாக்களே வந்திருக்கின்றனவே! சிவாஜியைக் கிண்டல் செய்து எத்தனை சினிமாக்களில் வசனம் பேசியிருக்கிறார்கள்? நடித்திருக்கிறார்கள்?''

''எந்த நோக்கத்துடன் சினிமாவை இந்த அளவுக்குக் கிண்டல் செய்கிறீர்கள்?''

''பொழுதுபோக்குக்காக மட்டுமே! நான் சினிமாக்காரர்களைத் திருத்த வேண்டும் என்று இப்படி ஒரு தொடரைத் தயாரிக்கவில்லை!''

''ஆனாலும் உங்கள் தொடர் குறிப்பிட்ட சில நபர்களின் மனம் புண்படும்படி அமைந்துள்ளதே!''

''ஒவ்வொரு கூட்டத்தில், ஒவ்வொருவரை நான் கிண்டல் செய்திருப்பதாய்ப் பார்ப்பவர்களே நினைத்துக் கொள்ளுகிறார்கள். இன்றைய சினிமாவின் பல்வேறு அம்சங்களைத்தான் நான் விமர்சனம் செய்கிறேனேயொழிய தனி நபர்களை அல்ல. சிலர் அப்படி நினைத்துக் கொண்டால் நான் எப்படிப் பொறுப்பாவேன்?''

''திரையுலகப் பிரமுகர்களிடமிருந்து ரியாக்ஷன் எப்படி இருக்கிறது?''

''பானுமதி, மகேந்திரன், பாலு மகேந்திரா, ஜெய்சங்கர், வசந்த் என்று பலர் நேரில் பார்த்த போது, ரொம்ப ரசிப்பதாய்ச் சொன்னார்கள். முன்பின் தெரியாத ஒரு எழுபது வயதுப் பெண்மணி, 'தனி மனுஷியாக, சோகங்கள் நிறைந்த வாழ்க்கை வாழும் எனக்கு, சரஸ்வதியின் செல்வன் பெரிய ரிலீஃப் — மனம் விட்டுச் சிரிக்கிறேன்' என்றார் போனில். விளம்பர நிறுவனத்தின் கணக்கெடுப்புப்படி இந்தத் தொடருக்கு மக்களிடம் நல்ல வரவேற்பு இருப்பதாய்த் தெரிகிறது. ஆனால் நேரிலும், டெலிபோனிலும் கண்டனம் எழுப்பியவர்களும் உண்டு.''



சந்திப்பு: மௌஷ்மி

# சக்கர நாற்காலியில் ஒருவர்

**'எங்கிருந்து வந்தது?' என்று வியக்கும்படியாக விபூதி வரவழைத்து விநியோகிப்பார் பாபா. மோதிரம் வரவழைத்துப் பரிசளிப்பார். இதுபோன்ற அற்புதங்களை விடப் பெரிய அற்புதம், அவரது சமுதாயப் பணி. கணக்கற்ற கிராமங்களைத் தத்து எடுத்து, குடிநீர் வசதி, பள்ளிக்கூடம், கோயில், பஜனை மண்டபம் என்று உருவாக்கித் தந்திருக்கிறார். புட்டபர்த்தியில் பல்கலைக் கழகமே நிறுவியிருக்கிறார். இன்னும் எத்தனையோ. எல்லாவற்றையும் விட மிகப் பெரிய அற்புதம், எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் அவர் போதிக்கும் அன்பு மார்க்கம். இத்தகைய அற்புதங்களுக்குப் பொன்விழா ஆண்டு இது....**

அமெரிக்காவிலிருந்தும் ஆஸ்திரேலியாவிலிருந்தும் ஆண்களும் பெண்களுமாக 26 பேர் பாபாவைக் காண வந்தனர். பாபா அவர்களுக்குப் பேட்டி அளிக்கத் தீர்மானித்து அழைத்தார். அவர்கள் அடைந்த ஆனந்தத்துக்கு அளவேயில்லை.

எல்லோரும் தரையில் சௌகரியமாக உட்கார்ந்து விட்டார்களா என்பதை அன்பு ததும்ப ஒரு முறை ஒவ்வொருவரையும் பார்த்துத் தெரிந்து கொண்டார் பாபா. அவர்களில் ஒருவர் மட்டும் சக்கர நாற்காலியில் அமர்ந்திருந்தார். எல்லோரும் அமைதியாக, நிசப்தமாக பாபாவைப் பார்த்தபடி இருந்தனர்.

பாபா புன்னகையுடன் மௌனத்தைக் கலைத்தார்: ''யாருக்காவது ஏதாவது கேட்க வேண்டுமா?''

பாபாவுக்கு மிக அருகே உட்கார்ந்திருந்த அமெரிக்கர், ''பாபா! நீங்கள் எங்கள் எஜமானர், குரு...'' என்று ஏதோ கூறத்தொடங்கினார். பாபா உடனே அவரை இடைமறித்துப் பேசினார்:

''இல்லை, நான் உங்கள் எஜமானன் அல்ல. நான் எல்லோருக்கும் சேவகம் செய்பவன்.''

அந்த அமெரிக்கர் சிறிது திடுக்கிட்டவராக, ''நீங்கள் எங்களுடைய ஆண்டை இல்லை எனில், எங்கள் தந்தை'' என்றார்.

பாபா தலையசைத்து, ''ஒரு விதத்தில்





கணவன்: இனிமே, பக்கத்து வீட்டுக் காரனை டி. வி. பார்க்க 'அலவ்' பண்ணக் கூடாது...

மனைவி: ஏன் ...?

கணவன்: சினிமா பார்த்துக்கிட்டே 'கொறிக்க எதுனாச்சும் இருந்தாக் கொண்டாயேன்'னு கேட்கிறான் ...!

— ஆர். வசந்தகுமார்.



"உங்களுக்கு அப்பாயிண்ட்மெண்ட் ஆயிடுத்து; நாளைக்குக் காலையில பத்து மணிக்கு ஆபீசுக்கு வந்திடுங்க..."

"'ஒன் அவர்' பர்மிஷன் வேணும் சார்..."

— ஆர். ரத்னசாமி.

"மனுஷனுக்கு மறதியே இல்லாம இருந்தால் எப்படி இருக்கும்?"

"இதே கேள்வியை என்கிட்ட நாலாவது முறையாக் கேட்டிருக்க மாட்டீங்க!"

— குடந்தை எல். ராம்பிரபு.



நான் உங்கள் தந்தைதான்! தாயும் கூட! சகோதரனும்!" என்றார். பிறகு, ஆன்மிகக் குடும்பம் பற்றி விளக்கினார்: "சத்தியம் தான் தந்தை; அன்புதான் தாய்; அமைதி அல்லது சாந்தி சகோதரி; ஞானம் நம் சகோதரன்."

இவ்வாறு பேச்சு ஆரம்பமாகி விட்டதும் எல்லோரும் தத்தமக்கு உள்ள சந்தேகங்களைச் சரமாரியாகக் கேட்க ஆரம்பித்து விட்டார்கள்!

"என் மனத்தை நான் எப்படிக் கட்டுப் படுத்த முடியும்?" என்று ஓர் ஆஸ்திரேலியர் கேட்டார்:

"கீதையில் கண்ணனை இதே கேள்வி கேட்கிறான் அர்ஜுனன்" என்ற பாபா, தொடர்ந்து சொன்னார்: "உன் சிந்தனையைக் கட்டுப்படுத்து. குறிப்பாக, நல்லவை அல்லாத எண்ணம் எது தோன்றினாலும் உடனே, 'இது தப்பான சிந்தனை; இதை அகற்றுவேன்' என்று உனக்கு நீயே கூறிக் கொண்டு, இறைவனை உதவிக்கு அழைத்துக் கொள். இதுவே நாளடைவில் மனக்கட்டுப்பாட்டுக்கு உன்னை அழைத்துச் சென்றுவிடும். மனம் எப்போதும் தூய்மையாக இருக்க வேண்டும். ஏனெனில், எண்ணங்களே செயல் வடிவம் பெறுகின்றன."

"மனம் தூய்மையாக இருக்க வேண்டும் என்று கூறுகிறீர்கள்; அதை எப்படிச் சாதிப்பது?"

பாபா: "மனம் எப்போதுமே தூய்மையாக, வெண்மையாகத்தான் இருக்கிறது. இதோ, இந்தக் கைக்குட்டையைப் பாருங்கள். இது வெள்ளைதான். ஆனால் பயன்படுத்தப் பயன்படுத்த அழுக்கு சேருகிறது. சலவைக்குப் போடுகிறீர்கள். சலவைக்காரர் இதை வெள்ளையாகச் செய்வதில்லை. இதிலுள்ள அழுக்கை நீக்குகிறார், அவ்வளவே. அதேபோல, நாமும் உள்ளத்திலிருந்து அழுக்கை நீக்கி விட்டால் மனம் பரிசுத்தமாகி விடுகிறது."

"சுவாமி! அன்புதான் அனைத்திலும் முக்கியமானது என்று அடிக்கடிச் சொல்கிறீர்கள். உள்ளத்திலிருந்து அன்பை எப்படிப் பெருகச் செய்வது?"

"அதற்கு ஒரு விசேஷ முயற்சி தேவையில்லை. விதையை ஊன்றிவிட்டு நீர் வார்க்கிறீர்கள். விதை தானாகவே வளர்கிறது. அதுவரை நீங்கள் பிரத்தியேக முயற்சி ஏதும் எடுப்பதில்லை. அதுபோலத்தான், அன்பை உங்கள் உள்ளத்தில் நிரப்பிக் கொண்டால் போதுமானது. அது தானாகவே பொங்கிப் பிரவகித்துப் பிறரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது என்பதைக் காண்பீர்கள். சிலர் சுயநலத்துக்காக அன்பு செலுத்துவார்கள். அப்போது இதயம்

சுருங்கிக் குன்றிவிடும். சுயநலமற்ற அன்பு சிரமமின்றிப் பாயும். மென்மையான மழை பெய்து பூமியைக் குளிர்விப்பது போல் இருக்கும். அன்புதான் உயிர். அன்புதான் எல்லாம். அன்பு நம்மை இறைவனிடம் அழைத்துச் செல்லும்.''

பாபாவிடமிருந்து அன்பு பிரவகிப்பதை அப்போதே உணர்ந்தவர்களாக, அந்த அன்பு மழையில் நனைந்து சற்று நேரம் அவர்கள் பேச்சற்று இருந்தனர். பாபா பெண்மணி ஒருவரைப் பார்த்து, ''ஏதோ கேட்க நினைக்கிறீர்கள் போலிருக்கே?'' என்றார்.

''நான் ஒரு டாக்டர். காலை நேரம்தான் தியானத்துக்கு நல்லது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். ஆனால்எனக்குநேரம்இருப்பஇல்லை. என் கணவரைக் கவனித்து ஆபீஸுக்கு அனுப்ப வேண்டும். பிறகு நானும் நோயாளிகளைக் கவனிக்க விரைய வேண்டும்.''

''பங்காரு!'' என்று மிருதுவாக அழைத்தார் பாபா. (பங்காரு = பொன்னானவர்) ''உங்களுக்குக் கடமை இருக்குமானால் அதுவும் அந்தக் கடமை பிறருக்குச் சேவை புரிவதாக அமையுமானால், அத்தகைய வேலையே பூஜையாக அமைந்து விடுகிறது. அதுதான் சிறந்த பூஜை; தியானம் எல்லாம்.''

அப்போது ஒரு பெண்மணி அழத் தொடங்கி விட்டார்! அருகில் இருந்த வி.கே. நரசிம்மன் (ஹிந்து நாளிதழின் துணை ஆசிரியராகப் பணியாற்றிய பாபா பக்தர்), ''சுவாமி! அந்தப் பெண்ணுக்கு ஏதோ வேதனை! உடம்பு சரியில்லை போலிருக்கு'' என்றார்.

''அது வேதனைக் கண்ணீர் இல்லை; ஆனந்தக் கண்ணீர்'' என்றார் பாபா. ''ஆமாம்! ஆமாம்!'' என்பது போல் அந்தப் பெண்மணி மேலும் கீழும் தலையசைத்தாரே தவிர, அவரால் பேச முடியவில்லை.

இன்னொருவர் கேட்டார்: ''சுவாமி சமுதாயத்துக்கு நான் சேவை புரிய வேண்டும் என்று நினைக்கிறேன். ஒரு திட்டம், அல்லது ஒரு சூத்திரம் வழங்குவீர்களா?''

''ரொம்ப சுலபம்'' என்றார் பாபா. ''நல்லதைப் பார், நல்லதைக் கேள், நல்லது பேசு, நல்லது செய், நல்லவனாய் இரு: கடவுள் சதா உன் அருகிலேயே இருப்பதாக நினைப்பாயேயானால் உன் கடமையைச் செய்யும் போது நீ இறைவனின் கருவியாகிறாய். ஒரு கடப்பாறையால் தோண்ட வேண்டுமென்றால் அது நேராக, உறுதியாக, கூர்மையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் தோண்ட முடியாது. அவ்வாறே ஆண்டவனின் கருவியாகிய நீயும் நல்லவனாக, நேர்மையானவனாக, பரிசுத்தமானவனாக, இறைவன் அருளைப் பெற்றவனாக விளங்கியே தீரவேண்டும். எனவே, ஆண்டவனின் கருவியாகவே உன்னை எப்போதும் எண்ணிக் கொள்.''

சக்கர நாற்காலியில் அமர்ந்திருப்பவரை பாபா நோக்கினார். ''உனக்கு என்ன வேண்டும், சொல்!'' என்றார்.

''நீங்கள்தான் வேண்டும்'' என்றார் அவர்.

''என்ன அற்புதமான பதில்!'' என்று வியந்து போனார் வி. கே. நரசிம்மன்.

— வி. பாலு.



# சிகரங்களை

அம்மா!

உங்கள் சராசரிக் கனவுகளோடு
என்னால் ஒத்துப்போக முடியாதம்மா.

அப்பா!

உங்கள் சம்பிரதாயக் கூட்டுக்குள்
என்னால் முட்டையிட முடியாதப்பா.

உங்களை நான் தொழுகிறேன்;
ஆனால் — உங்களுக்காக ரகசியமாக
அழுகிறேன்.

உங்களால் என்னைப் புரிந்துகொள்ள
இயலாது.

உங்கள் மூக்குக் கண்ணாடி வழியே
என் முழுமைகாண முடியாது.

மனிதன் என்பவன் வெறும் எலும்பு
நரம்புகளால் பின்னப்பட்டவன் இல்லை.

அவன் — எண்ணங்களால் கட்டப்பட்டவன்.

ஆனால் — உங்கள் எண்ணங்கள்
உங்களுக்குச்
சொந்தமில்லை.

அவை — இறந்த நூற்றாண்டுகளின்
இரவல்கள்.

மரபோடு பிறந்து — மரபோடு வளர்ந்து —
மரபோடு மணந்து — மரபோடு புணர்ந்து—
மரபோடு மரிக்கப்போகும் உங்களுக்கு
என் புதிய மௌனம் புரியாது.

சிறகுகளை நீங்கள் நடப்பதற்கு
மட்டுமே பயன்படுத்தியவர்கள்.

நீங்கள் சந்திர சூரியரை இரவு பகல்
என்ற அடையாளங்களாய் மட்டுமே
அறிந்தவர்கள்.

உங்களுக்கு வாழ்க்கை என்பது
இருக்கும்வரைக்கும் சுவாசிக்கும்
ஏற்பாடு.

மீதக்கடையின் சில்லறைச் சத்தங்களே
உங்களுக்குச் சங்கீதம்.

அலுவலக நேரத்துப் பேருந்தில் இடம்
கிடைப்பதே உங்களுக்குச் சொர்க்கம்.

ஐம்பத்தெட்டு வயதுக்குள் ஓர்

அரை கிரவுண்டில் வீடு பேறு அடைவதே உங்களுக்கு மோட்சம்.

நீங்கள் மட்டுமில்லை; இந்த நூற்றாண்டு மனிதர்கள் எல்லோருமே இப்படித்தான்.

இங்கே உடல்கள் உருவாவதுமட்டும் வெவ்வேறு கருப்பைகளில்;
ஆனால், மனங்கள் வார்க்கப்படுவது மட்டும் ஒரே அச்சில்.

அப்படி ஒரு வார்க்கப்பட்ட மனசுக்கு நான் வாழ்க்கைப்படவில்லை.

நான் உங்களுக்குப் பிறந்தவன்தான்;
ஆனால் உங்கள் ஜாதியில்லை.

விதைக்குப் பிறந்தாலும் பூவுக்கு வேறு குணம்.

நீங்கள் கூட்டுப் புழுக்கள்.

நான் சிறகுகளைச் சிநேகிப்பவன்.

நீங்கள் ஒவ்வொரு ரூபாயையும் தூக்கிப் பிடித்து, நடுவில் ஓட்டைச் சோதிப்பவர்கள்.

நானோ வண்ணத்துப் பூச்சியின் சிறகுகளை வாசிப்பவன்.

நீங்கள் எழுதுவது கணிதம்.

நான் எழுதுவது கவிதை.

# நோக்கி...

கணிதம் வாழ்வின் பகுதி என்பது எனக்குப் புரிகிறது.

கவிதையும் வாழ்க்கையின் பகுதி என்பது உங்களுக்குப் புரியவில்லை.

என் கவிதைகளைப் போலவே என்னையும் உங்களுக்கு மதிப்பீடு செய்யத் தெரிய வில்லை.

நீங்கள் பூமியிலிருந்து பார்க்கிறீர்கள்;
அதனால்தான் நட்சத்திரம் நிலாவைவிடச் சின்னதாகத் தெரிகிறது.

பிறந்தவுடன், நான் ஆணா பெண்ணா என்று அறிய ஆர்வங்காட்டிய உங்களுக்கு—
வளர்ந்தவுடன் நான் கணிதனா கலைஞனா என்று ஏன் கண்டறியக் கூடவில்லை?

இந்திய வாழ்க்கை மரபில் மகன் என்ற பதத்தின் மதிப்பீடு வேறு.

தொட்டில் வயதில் மகன் என்பவன் தாம்பத்ய விளையாட்டின் தங்கப் பதக்கம்.

மழலை வயதில் மகன் என்பவன் உளறும் சங்கீதவாத்யம்.

வளரும் வயதில் மகன் என்பவன் இன்ஷூரன்ஸ் பாலிசி.

சம்பாதிக்கும் வயதில் மகன் என்பவன் வட்டி.

மரணப் பொழுதில் மகன் என்பவன் கொள்ளிக்குச்சி.

பிணங்களை எரிப்பதற்காக மேல்நாட்டில் மின்சார நாற்காலி தயாரிக்கிறார்கள்.

இந்தியாவில் மகன்களைத் தயாரிக்கிறார்கள்.
இப்போதும் சொல்கிறேன் —

நான் உங்களை மதிக்கிறேன்; பனித்துளி களை
நேசிக்கும் முயல் மாதிரி எப்போதும் உங்களை
நேசிக்கிறேன்.

என்மீது உங்களுக்கு உரிமையிருக்கிறது.

ஆனால், உத்தரவு போடக்கூடாது.

என்னைப் பெற்றெடுப்பதற்காக ஒன்றும் நீங்கள் பிறப்பெடுக்கவில்லை.

உடம்புக்கும் உயிருக்கும் நீங்கள் பொறுப்பு.

உணர்வுக்கு.....?

மேகம் கடலுக்குப் பிறந்ததுதான்;
ஆனால் மழையெல்லாம் தனக்கே சொந்தமென்று கடல் கையொப்பம் கேட்பதில்லை.

குஞ்சு பறக்கும்வரை சிறகுகளுக்குச் சிக்கெடுத்துவிட்ட தாய்ப்பறவை
அது கூட்டைவிட்டுப் பறந்ததும் வானத்தில் கோடு கிழிப்பதில்லை.

மனித ஜாதிக்கு மட்டும்தான் இந்த விளங்காத
விலங்குகள்.

என்னை விட்டுவிடுங்கள்; நான் மேகம்.

கட்டுக்கள் எதற்கு? நான் காற்று.

ஆனால், நான் வெறும் கனாக்காரனில்லை.

என் உறுப்புகளைப் போலவே பொறுப்பு களையும்
மதிக்கிறவன்.

உத்தியோக உத்திகளை நானும் அறிவேன்.

என் செருப்பையும் சுயமரியாதையையும் கொஞ்சம் தேய்த்தால் உத்தியோக தேவதை எனக்கும் சிறகு தருவாள்.

**• வைரமுத்து**



"உலகிலேயே மிக உயர்ந்த விற்பனை எண்ணிக்கையை எட்டிப் பிடித்துள்ள நாளிதழ் "ஆசாஹி ஷிம்பான்" என்ற ஜப்பானிய நாளிதழ் தான்.

ஒரு நாள் விற்பனை: 1 கோடியே 20 லட்சம்!

| | |
|---|---|
| விற்பனைப் பிரதிகள் | : 6,000 |
| வினியோக வேன்கள் | : 860 |
| விநியோகிப்பாளர்கள் | : 70,000 |
| அலுவலக ஊழியர்கள் | : 9,000 |

அச்சு இயந்திரங்கள்: 175 ரோட்டரி; 36 ஆப்செட்; நாளிதழின் வயது: 101; நிருபர்கள்: 400; வாசகர்கள்: 3 கோடியே 50 லட்சம்!

தகவல்: தக்கோலம் அ. முஸ்தபா.

ஆனால், மாட்டேன்.

எனக்கு அந்த நாற்காலிச் சிறை பிடிக்கவில்லை.

எனக்கு அலாரம் வாழ்க்கை ஆகாது.

எப்படி உங்களால் வாழ்க்கைவிற்று வயிறுவாங்க முடிகிறது?

நீங்கள் காற்றுவாங்கும் இந்த மின்விசிறி உங்கள் சுவாசம் விற்று வாங்கிய — தல்லவா?

இங்கே யாரும் வாழ்க்கையை வாழவே இல்லை.

ஏழை மகிழ்ச்சியாய் இல்லை; பணக்காரன் நிம்மதியாய் இல்லை.

வயிற்றுக்குச் சம்பாதிக்கும் ஏழை — வருமானவரிக்குச் சம்பாதிக்கும் பணக்காரன் —
இருவருமே வாழ்க்கையைச் சம்பாதிக்க மறந்துவிட்டார்கள்.

நான் சலித்துவிட்டேன்.

இந்த இருபத்தைந்து வருட நகர வாழ்க்கையில் ஒரே மாதிரியான சம்பவங்களால் நான் அலுத்துவிட்டேன்.

ஒவ்வொரு நாளும் கிழக்கே உதித்து மேற்கே மறைவதற்கு நானொன்றும் சூரியனில்லை.

செவிப்பறையைச் சல்லி செய்யும் இந்த சப்தங்கள்; காற்றில் விஷம்கலக்கும் மசல் கலாசாரம்; வருஷமெல்லாம் கர்ப்பிணியாயிருக்கும் நகரத்துச் சாலைகள்; குடியிருக்கும் யாருக்கும் அடுத்தவீட்டு என் தெரியாத அந்நியங்கள்; செக்குமாட்டுச் சிந்தனைகள்; சிதிலமாகிப்போன ரசனைகள்;
ஒவ்வொரு நாளும் என்னை எழுப்பிவிடும் உங்கள் சாபங்கள் — இவைகளால் என் கவிதையும் நானும் களைத்துப் போனோம்.

என்னைத் தனியே விட்டு விடுங்கள் அம்மா.

நான் குயில்.

என்னைக் கசாப்புக் கடையில் கறிக்கு விற்று விடாதீர்கள் அப்பா.

பூக்களின் மதிப்பைக் கூட எண்ணிக்கையால் தீர்மானிக்கும் வியாபாரி மாதிரி காசானால் மட்டுமே என் கவிதைகளை உங்களால் கணிக்க முடியும்.

என் கவிதைகள் என்றாவது பூக்கலாம்; ஆனால், பணத்துக்கு நான் கவிதை பூக்க முடியாது.

பெற்றவர்களே என்னை மதிக்காத போது மற்றவர்களை எப்படி நான் எதிர் — பார்ப்பது?

எனக்குத் 'திருஞானம்' என்று பெயர் வைத்தீர்கள்.

என் பெயருக்கு மட்டும் 'திரு' மரியாதை வழங்கத் தெரிந்த உங்களால் என் ஞானத்திற்கு ஏன் மரியாதை வழங்க முடியவில்லை.

உங்களை விட்டுப் பிரிகிறேன்.
சந்தோஷத்தோடு பிரிகிறேன்.

கண்ணாடியைக் காயப்படுத்தாமல் பிரியும் பிம்பம்மாதிரி பிரிகிறேன்.

போகிறேன்.

கழுத்தில் கிடக்கும் மச்சம் மாதிரி மலைச்சரிவில் ஒரு கிராமம்.

அங்கே,
ஒரு மேகம் நனைத்து விட்டுப் போக மறு மேகம் துவட்டி விட்டுப் போகும் ஒரு மூங்கில் வீடு.

என் நண்பன் சாவி கொடுத்திருக்கிறான்.

ஓசையற்ற உலகம்.

அப்படியேதேனும் சப்தம் வந்தாலும் அது சங்கீதம்.

மலையின் ரகசியத்தை முணுமுணுத்துக் கொண்டே நகரும் நதி.

அங்கே போகிறேன்.

எனக்குள் இறந்து கிடக்கும் மனிதனை எழுப்பப்போகிறேன்.

வாழ்க்கையின் மர்மங்களை மனிதர்களுக்கு வாழ்ந்துகாட்டப் போகிறேன்.

மூளையால் வாழும் வாழ்க்கையிலிருந்து மனிதர்களை இதயத்தால் வாழும் வாழ்க்கைக்கு இட்டுச செல்லப் போகிறேன்.

என்னைத் தேட வேண்டாம் என்று சொல்ல மாட்டேன்.

தேடுங்கள்.

ஆனால், நீங்கள் தொலைத்த இடத்தில் நானில்லை.

அம்மா!

போகிறேன்.

அப்பா!

போகிறேன்.

இதோ!
நான் வானம்பார்த்துக் கிடந்த இந்த ஜன்னலோர நாற்காலி இனி அடிக்கடி கிரீச்சிடாது.

திரும்பவிரும்பாத
திருஞானம்.

மனசு கனத்தது.

மனசு கனத்தால் — ஒன்று கண்ணீர் விடவேண்டும்; இல்லை கவிதை எழுத வேண்டும்.

அவன் இரண்டும் செய்தான்.

டைரி நனைந்தது.

●

"அந்த நதிக்கரைக்கு — என்னை
அழைத்துச் செல்லுங்கள்
ஆன்மா துடிக்கிறது — அங்கே
அழைத்துச் செல்லுங்கள்

●

ஓடிக் களைத்துவிட்டேன் — உறவில்
உள்ளம் சலித்துவிட்டேன்
பாடி அலுத்துவிட்டேன் — பெரும்
பாரம் சுமந்துவிட்டேன்

●

ஓயாமல் அடிக்கின்ற தென்றல் — கொஞ்சம்
ஒலியாகச் செல்கின்ற ஆறு
சாயாமல் இருக்கின்ற புன்னை — அது
தமிழ்பேசி வரவேற்கும் என்னை.

●

மலைதொட்டு அடிக்கின்ற சாரல் — எந்தன்
மடிதொட்டு நனைக்கின்ற தூறல்
தூரத்தில் நதியோடும் சத்தம் — எந்தன்
துயரத்தில் பங்கேற்கும் நித்தம்

●

இதயத்தில் என்னென்ன வேட்கை — இது
இடைவேள்ளை இல்லாத வாழ்க்கை
வாழ்வோடு போராட்டம் இங்கே — இதில்
வாழ்கின்ற நிமிஷங்கள் எங்கே?

●

என்னோடு குயில்பாட வேண்டும் — அந்தக்
குயிலோடு நான்பாட வேண்டும்
கண்ணோடு இமைமூட வேண்டும் — நான்
காற்றோடு கதிசேர வேண்டும்."

●

எழுதி முடித்தபோது ஒரு சொட்டுக் கண்ணீர் அந்த நாற்காலியின் விளிம்பில் விழுந்தது.

விடிந்தபோது அந்தக் கண்ணீர்த் துளியும் அவனும் அங்கே இல்லை.

— இன்னும் செல்வேன்.

---

## குறிஞ்சியைக் காப்பாற்றுவோம்!

பன்னிரண்டு ஆண்டுகளுக்குக்கொருமுறை பூக்கும் நீலக் குறிஞ்சிப் பூக்கள் இப்போது அடியோடு அழிந்து போகும் நிலையில் உள்ளன. தோட்டங்கள் உருவாக்கவும், விவசாயத் திற்காகவும் புல் மேடுகளும், சோலைக் காடுகளும் அழிக்கப் பட்ட போது குறிஞ்சிக் காடுகளும் அழிந்தன. 90 சதமானத் திற்கும் மேல் குறிஞ்சிச் செடிகள் ஏற்கனவே அழிக்கப் பட்டு விட்டன. எஞ்சியிருக்கும் குறிஞ்சிக் காடுகள் கேரள மாநிலத் தில் மூணாறுக்கும் கொடைக்கானலுக்கும் இடையே அமரா வதி நதி உற்பத்தியாகும் இடத்தில் 1982 ஆம் ஆண்டு கடைசி யாகப் பூத்தன. அடுத்த முறை குறிஞ்சி பூக்கும் காலம் வரும் போது மலை முழுவதும் கடல் போலப் பூத்து நிற்கக் குறிஞ் சிகள் இரா.

நீலக் குறிஞ்சிகள் பாதுகாக்கப் பட வேணடியதின் அவசி யத்தை உணர்த்த, குறிஞ்சி மலைகள் வழியே ஒரு பாதயாத் திரை செப்டம்பர் இறுதியில் நடந்தது.

— ஜி. ராஜ்குமார்.



# நேர்மை தூங்கும் நேரம்

கணேசன் பேங்க்குக்குப் போய்விட்டுத் திரும்பும் போது சூரியன் உச்சிக்கு வந்திருந்தான். இனி துணி மூட்டையைச் சுமந்து கொண்டு ஆற்றுக்குப் போய்த் திரும்புவது ஆகக் கூடிய காரியமாய்த் தோன்றவில்லை. பேசாமல் அழுக்கு சேர்க்கப் போய் விட்டு, பொழுது விடிந்ததும் பெட்டியைப் பற்ற வைத்தால், இருட்டு கட்டும் வரை தேய்த்துக் கொண்டிருக்கலாம் என்று தீர்மானித்துக் கொண்டான்.

எப்படியோ மனத்தை உறுத்திக் கொண்டிருந்த பிரச்னை ஒருவழியாக ஓய்ந்து விட்டது. நாளைக் கருக்கலில் கிளம்பி, கண்ணாமூச்சிக்குப் பஸ் ஏறி, ஒரு வெற்றிலையை வாங்கி, பணத்தை வைத்து மருமகனிடம் நீட்டிவிட்டால், இன்னும் நிம்மதியாய்ப் போய்விடும்! அப்புறம் மகள் முகத்தை ஊத வைத்துக் கொண்டு மாதத்துக்கு ஒரு தரம் வந்து ஒப்பாரி வைப்பதாவது குறைந்து போகும்!

கணேசன் சுமை இறங்கிப் போன சுகத்தை அனுபவித்தபடி நிதானமாகத் தெருவுக்குள் நுழைந்த போது, தெருவே கலகலப்பாய் இருந்தது. வழக்கமாய் இந்த நேரத்துக்கெல்லாம் வளைக்குள் பதுங்கிய எலிகளாய் இருக்கும் காலனிவாசிகள், ஆளுக்கொரு பக்கம் குனிந்தபடி வாசலையும், வீதியையும் வலம் வந்து கொண்டிருந்தனர்.

தெருவின் முகப்பில் ஒதுக்குப்புறமாய் இருந்த கணேசனின் குடிசை வாசலில் கூட ஓரிருவர் குனிந்து தேடிக் கொண்டிருந்தனர். போதாததற்குக் கணேசனின் மனைவி அருக்காணியும் கூட அந்தப் பக்கமாய் மண்ணைக் கிளறிக் கொண்டிருந்தாள். கணேசன் ஒன்றும் விளங்காமல் அவளைச் சமீபித்தான்.

"என்ன புள்ளே — இடுப்பு நோவு எடுத்த வங்களாட்டம் எல்லாரும் குனிஞ்சுக்கிட்டுக் கூத்தடிக்கிறாங்க?"

"ஸ் — கம்முனு கிட! கடக்காரு வூட்டுக் குழந்தையோட காது ஜிமிக்கி எங்கியோ கழண்டு விழுந்துடுச்சாம். ரெண்டு மணி நேரமாத் தேடிக்கிட்டு இருக்காங்க."

"யாரு... நம்ம லதா பாப்பாவோடதா?"

"அட, ஆமாங்கறேன்."

அருக்காணி ஆதங்கத்தோடு நீட்டி முழக்கிவிட்டு மண்ணைக் கிளற ஆரம்பிக்கவும், கணேசனுக்கு "அடப்பாவமே" என்றிருந்தது. அருக்காணி "கடக்காரு" என்று குறிப்பிட்ட கடைக்காரர் சொர்ணமூர்த்தி ஓர் ஒதுக்குப்புறமாய் எரிச்சல் தடவிய முகத்தோடு நின்று கொண்டிருப்பதைக் கணேசன் அப்போதுதான் கவனித்தான்.

சொர்ணமூர்த்தியை நினைத்த போது கணேசனுக்கு "இந்த இழப்பு அவருக்கு வேண்டியதுதான்" என்று எண்ணத் தோன்றியது. ஒரு காசா, ரெண்டு காசா? எத்தனை பேரிடம் அநியாய வட்டி வாங்கி இருப்பார்? வட்டிக் கடையும், மளிகைக் கடையுமாகக் கொழிப்பவருக்கு இந்த அரைப் பவுன் விவகாரம் அப்படி ஒன்றும் பெரிதல்ல!

இத்தனை வருட அனுபவத்தில் நேற்றைக்குத்தான் கணேசன் கூட சொர்ணமூர்த்தியை எதிர்த்துப் பேசியிருந்தான். பின்னே? இருக்கப்பட்டவர் என்பதற்காகத் தலை வரையில் ஏற வேண்டுமா என்ன?

விஷயம் வேறொன்றுமில்லை. மகளுக்குச் செய்ய வேண்டிய சீர்வரிசையில் விட்டுப் போனதை நிரவ ஒரு ஐந்நூறு ரூபாய் அவசரமாகத் தேவைப்பட்டது கணேசனுக்கு. சொர்ணமூர்த்தியைப் பார்த்தான். அவர் இல்லை என்று சொல்லி இருந்தால் ஒன்றுமில்லை. ஏழெட்டுத் தடவை இழுக்கடித்து விட்டு இருநூறு ரூபாயை நீட்டினார். மீதி முந்நூறு எப்போதோ கணேசன் கொடுக்க மறந்த வட்டிக்கு, வட்டியாகப் பிடித்துக் கொள்கிறேன் என்றால் யாருக்குத்தான் எரிச்சல் வராது?

"இது ரொம்ப அநியாயம் முதலாளி... கஷ்டம்னு வந்து நிக்கும் போது பழசைக் காட்டிப் பழி வாங்காதீங்க."

ஜெ.பாக்கியலட்சுமி

"ஆமாண்டா உங்களுக்கெல்லாம் வாங்கும் போது - இனிக்கும். குடுக்கும் போது மட்டும் குதிப்பீங்க! வக்கில்லேன்னா லும் உங்களுக்கு வாய் மட்டும் நீளமா இருக்குடா."

சொர்ணமூர்த்தி இஷ்டத்துக்குப் பேசவும், கணேசன் சட்டென்று முகத்திலடித்தாற் போல் துணியை உதறித் தோளில் போட்டுக் கொண்டு திரும்பிப் பார்க்காமல் நடந்து விட்டான். பின்னால் சொர்ணமூர்த்தி "உன்கிட்டே எப்படி வசூல் பண்றதுன்னு எனக்குத் தெரியும்" என்று கத்திக் கொண்டிருந்தார்.

இப்படி இடுக்கிப்பிடியாய், இல்லாதவர்களின் மேல் பாயும் சொர்ணமூர்த்திக்கு அவ்வப்போது இப்படிச் சில இழப்புகள் நேரிட வேண்டும் என்று கணேசனின் உள் மனம் ஒரேயடியாகச் சாபம் கொடுத்தது. ஆனால் அடுத்த நிமிஷமே "சேச்சே, இப்படி ஒரு தவிப்பு யாருக்கும் ஏற்படக் கூடாது. குறிப்பாகச் சொர்ணமூர்த்தியின் மனைவி அகிலாவுக்காகவாவது தொலைந்து போன நகை திரும்பக் கிடைத்து விட வேண்டும்" என்று அவன் மனம் அரற்றியது. சொர்ணமூர்த்தியைப் போன்ற குள்ளநரிக்கு அகிலாவைப் போன்ற அஷ்டலட்சுமியா வந்து வாய்க்க





"கள்ள நோட்டு ரொம்ப அதிகமாயி டுச்சே, என்ன செய்யலாம்?"

"பேசாம, இந்திய அரசு பிரிண்ட் பண்ற நோட்டுகள்ல, 'போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்'னு அச்சடிச் கூட வேண்டியதுதான்!"

— எஸ். முகம்மது யூசுப்.

வேண்டும்! அப்படி அரிதாய்க் கிடைத்த அகல் விளக்கையாவது அருமையாய் வைத்துக் கொள்ளத் தெரிகிறதா இந்த அடி மடையனுக்கு?

அன்பும், அனுசரணையும், பரிவும், பச்சாத்தாபமும் நிறைந்த அகிலாவுக்காகவாவது தொலைந்த பொருள் கிடைத்து விட வேண்டும் என்று ஆண்டவனை வேண்டினான் கணேசன். இல்லை என்றால் அதற்கும் சொர்ணமூர்த்தி அகிலாவைத்தான் திட்டுவான்.

விலகியே இருந்தால் விரோதமும், பழி உணர்ச்சியும் அதிகமாகும் என்று நினைத்துக் கொண்ட கணேசன் சொர்ணமூர்த்தியை நெருங்கி தீனமாகக் கும்பிடு போட்டான்.

"பாப்பா காதுல இருந்தது எப்படி முதலாளி கழண்டு விழுந்திருக்கும்?"

"எவனுக்குத் தெரியும்! அந்தக் 'குட்டிப் பிசாசு' வீட்டுக்குள்ளேயே விளையாண்டா தானே! காசோட அருமை தெரிஞ்சா தானே!"

"எங்காவது கல்லு சந்திலியோ, காத்தடிச் சதாலே சருகுக்கு அடியிலேயோ தான் விழுந்திருக்கும்... கிடைச்சிடும் முதலாளி."

"ம்ம்.... நீயும் அப்படி தேடிப்பாரு..." சொர்ணமூர்த்தி மேலோட்டமாகச் சொல்லிவிட்டு நின்றாலும், தேடுகின்ற ஒவ்வொருவரையும் கண்குத்திப் பாம்பாகக் கவனித்து கொண்டுதான் இருந்தார்.

ஒரு மணி நேரம் போனதுதான் மிச்சம். எந்தப் பலனும் இல்லை. அகிலா பேங்கிலிருந்து வீடுதிரும்பி, சொர்ணமூர்த்தியிடம் வாங்கிக் கட்டிக் கொண்டு, அவளும் வந்து அரைமணி நேரம் தேடிப் பார்த்தாள்.... ஊஹூம்... எல்லோரும் சலித்துப் போய் வீடுதிரும்பி விட்டார்கள்.

சொர்ணமூர்த்தியே கூட நம்பிக்கை இழந்து அரைமனத்தோடு திரும்பிப் போனார்.... நீண்ட குச்சியை வைத்துச் சருகுகளைக் கிளறிக் கொண்டிருந்த கணேசனின் கண்ணில், ஒரு சரளைக் கல்லின் மீது சாய்ந்துகிடந்த ஜிமிக்கி பளிச்சென்று வெளிச்சம் காட்டியது.... பாய்ந்து எடுத்தான்.... அதே திசையில் மேலும் கிளறியதில் ஒரு மொட்டும், திருகாணியும் அகப்பட்டன.

கணேசனின் துள்ளலையும், படபடப்பையும் பார்த்து பக்கத்தில் வந்த அருக்காணி சுற்றும், முற்றும் பார்த்து விட்டுத் தயங்கித்தயங்கிக் கேட்டாள்.....

"என்ன மச்சான் செய்யப் போறே?"

"ஏன் புள்ளே..."

"இல்லே... இதைக் கொண்டு போய்க் கொடுக்கத்தான் வேணுமா? நாமளே வச்சுக்கிட்டாதான் என்ன?"

"அடிச்செருப்பாலே!" கணேசன் அருக்காணியைப் பார்த்துப் புறங்கையை ஓங்கினான்.

"இது இருந்துட்டா நம்ம பஞ்சம் விடிஞ்சுடுமா? போடி அப்பாலே! அந்தம்மா தெய்வம் மாதிரி — அவங்க சொத்துக்கு ஆசைப்படக் கூடாது. சரியான மனுஷன்னா அவன் நெனப்புலயே நேர்மை இருக்கணும்மா."

கணேசனின் சப்தம் கேட்டோ, சந்தேகப்பட்டோ, சொர்ணமூர்த்தி எட்டிப் பார்க்க,

"முதலாளி — நக கெடச்சுடுச்சு" என்று கத்தினான் கணேசன். சொர்ணமூர்த்தி ஓடி வந்தார்.... சந்தேகம் கொப்புளிக்கும் கண்களால் கணேசனைக் கூர்ந்து பார்த்து விட்டு "பரவாயில்லியே" என்று முனகினார்....

திரும்பவும் கூட்டம் கூடி, கிடைக்காமல் இருந்த இன்னொரு செட்டைத் தேடி நேரத்தைச் சாப்பிட்டது. எவ்வளவு தேடியும் இன்னொரு செட் ஜிமிக்கி கிடைக்கவே இல்லை.

மாலை ஆறு மணி சுமாருக்குத் தான் அந்த அவலம் நேரிட்டது. துணி தோய்த்துக் கொண்டிருந்த கணேசனும், அரிசியில் கல்பொறுக்கிக் கொண்டிருந்த அருக்காணியும், ஒரு சேர தத்தம் வேலைகளை நிறுத்திவிட்டு, குடிசை வாசலுக்கு வந்த சொர்ணமூர்த்தியையும், காலனியின் பெரியமனிதர்கள் சிலரையும் வரவேற்றார்கள்.

"பெரியவங்க எல்லாரும் ஒண்ணா வந்திருக்கீங்க... ஏதாவது விசேஷமுங்களா?"

சொர்ணமூர்த்தி தொண்டையைச் செருமிக் கொண்டு வானத்தில் பார்வையை மேயவிட, அவருக்குப் பக்கத்து வீட்டில் குடியிருந்த ஹெட்மாஸ்டர் பரசுராமன்தான் மெல்ல ஆரம்பித்தார்....

"அது...வேறொண்ணுமில்லே கணேசா... சொர்ணமூர்த்தி நீ கேட்ட பணத்தைக் குடுத்

# காலை உணவிற்கு சாக்லேட்!




# புதியது! பானி மிக்ஸ் சாக்லேட்

## சுவையான காலை உணவிற்கு ஒரு வழி.

உங்கள் குழந்தை விரும்பி உண்ணும் பானி மிக்ஸ் சாக்லேட்டை காலை உணவிற்கு கொடுங்கள். இது தானியங்கள், பழங்கள் முந்திரியோடு சாக்லெட்டும் கலந்த பாரிட்ஜ்.




**எளிதில் தயாரிக்கலாம்**

சமைக்கத் தேவையில்லை. ஒரு கிண்ணத்தில் தேவையான அளவு பானி மிக்ஸை போடவும். முன்னமே கொதிக்க வைத்த பாலைச் சேர்க்கவும். மிருதுவான பாரிட்ஜ் கிடைக்க மெதுவாக கலக்கவும்.



**பானி மிக்ஸ்**(T)

உடனடியாக தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்
இரு வகைகளில்:
நாச்சுரல் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/C/1/89/TAM



"நேத்து உடம்பு சரியில்லாம நான் டாக்டரைப் பார்க்கப் போனப்போ நான் கத்து வெச்சிருந்த 'முத லுதவி'தான் எனக்குக் கைகொடுத்தது!"

"எப்படி?"

"எந்த நாளுமில்லாம திடீர்னு ஒரு பேஷண்ட்டைப் பார்த்த அதிர்ச்சியில் டாக்டர் மயக்கம் போட்டு விழுந்துட்டார்! அவருக்குச் சிகிச்சை அளித்து எழுப்பி உட்கார வெச்சேன்!"

— வேதபுரி எஸ். இரமேஷ்.

துடறாராம். அந்த இன்னொரு செட் ஜிமிக்கியையும் நீ குடுத்துடறதுதான் முறைன்னு...."

வெகுவாகத் தாக்கப்பட்டு, கணேசன் "ஐயா!" என்று அலறியபடி பின் வாங்கினான்....

"நகையைப்பாத்தா யாருக்குமே கொஞ்சம் நப்பாசை வர்றது சகஜம்தான்... அதுவும் உன்னை மாதிரி தொட்டுக்கோ தொடச்சுக்கோன்னு இருக்கிறவனுக்கு அனாமத்தா கிடைச்சா ஆசை வர்றது தப்பில்லே... என்ன இருந்தாலும் குழந்தையோட நகை.... சொர்ணமூர்த்திதான் பணம் தர்றேன்னு சொல்றாரில்லே... என்ன கணேசா?"

இன்னொருவர் நாசூக்காய் நியாயம் சொல்லவும் கணேசன் உடம்பெல்லாம் தீப் பிடித்தவன் போல நடுங்கினான்... "ஐயா... என் தொழில் மேல சத்தியமா நகை எங்கிட்டே இல்லீங்க... எல்லாரும் தேடினதைப் போல நானும் தேடினேன். கண்ணுல பட்டதை எடுத்துக் குடுத்தேன். அதுக்காக நான்தான் நகையை எடுத்து வச்சிருக்கேன்னு சொல்றது என்ன நியாயங்க... கண்ணுக்குத் தெரிந்ததை நேர்மையாத் திருப்பிக் குடுத்தது தப்புங்களா?"

"ஆமா.. பெரிய்ய யோக்கியன்... நேர்மையாம்... நேர்மை. கோபத்தால் ஆடிக் கொண்டிருந்த உடம்பை அடக்கியபடி சொர்ணமூர்த்தி கத்தினார்.." அத்தனை பேரும் அஞ்சாறு மணி நேரமா தேடியும் கிடைக்காத பொருளு இவர் பாத்த மாத்திரத்திலே பட்டுனு வந்து உட்கார்ந்துகிச்சோ! எடுத்து வச்சுக்கிட்டு எகத்தாளமா பண்றே!"

"இல்லீங்க... நான் எடுக்கலீங்க!" கணேசன் கதறினான்... யாரும் சட்டை செய்யவில்லை. "இப்பிடிக் கேட்டா பதில் வராது.... பேசாம போலீசில சொல்லுங்க.. நம்மளை என்ன இளிச்சவாயன்னு நினைச்சானோ?" என்று ஆவேசப்பட்ட கோடி வீட்டு வரதராஜன் கணேசனின் சட்டையைச் சுருட்டிப் பிடித்து "காதுல போட்டிருக்கிற ஜிமிக்கி, தானா கழண்டு வுழுமாடா — எங்களுக்குக் காது குத்தறியா" என்று குலுக்கினார்.

"திருகாணி லூசா இருந்துச்சா, இல்லை உன் அருக்காணி அழுத்தி வச்சாளான்னு இப்ப தெரிஞ்சுடும்" என்றபடி அவர் கையை ஓங்க, கணேசன் திமிற, அந்த களேபரத்தில் கணேசனின் பாக்கெட்டில் இருந்த ஐந்து நூறு ரூபாய்த் தாள்கள் பிதுங்கி வெளியேறி, காற்றில் சிதறின...

அவசர அவசரமாகப் பைத்தியம் பிடித்தவன் போல நோட்டுக்களைப் பொறுக்க வந்த கணேசனை நெட்டித் தள்ளி விட்டுப் பணத்தை எடுத்துக் கொண்ட சொர்ண மூர்த்தி, "இந்தப் பணம் ஏதுடா உனக்கு? நேத்துதானே என்கிட்டே பணத்துக்குத் தொங்கிட்டு, நான் இல்லேன்னு சொன்னதும் மூஞ்சைத் திருப்பிக்கிட்டு வந்தே" என்றார். கணேசன் கண்ணீர் வழியத் திக்கித் திணறி "கடன் வாங்கினேன்" என்றான்...

சொர்ணமூர்த்தி நக்கலாகச் சிரித்தபடி "எந்த மவராசன்டா உனக்குக் கடன் குடுத்தது?" என்றார். கணேசன் மௌனம் சாதித்தான். "சொல்லுடா... யார் குடுத்தா?" கணேசன் பேசவில்லை.

"பாத்தீங்களா... நகையை வித்துக் காசாக்கிட்டான். இவன் தோலை உரிச்சுக் காயப் போட்டாத்தான் என்ன?"

வந்திருந்த கூட்டம் கசமுசவென்று ஆளுக்கொன்றாய்ப் பேசி, கடைசியில் கணேசன் அந்த இடத்தைக் காலி செய்ய வேண்டும் என்று எச்சரித்து விட்டு மெல்ல அகன்றது.

சொர்ணமூர்த்தி பணத்தோடு போய் விட்டார். கணேசன் கண்ணீர் வழிய நின்றிருந்தான். அழுது அழுது முகம் சிவந்திருந்த அருக்காணி "அப்பவே நான் அடிச்சுக்கிட்டேன்... இந்த காலம் பொல்லாத காலம்யா... நேர்மை எல்லாம் கால் நீட்டித் தூங்கற காலம்... நகையைக் குடுக்காதேன்னு... கேட்டியா? யோக்கியனா குடுத்தே...! இப்ப திருடன்னு ஓரம்கட்டிட்டாங்க... இந்த ஐந்நூறு ரூபாயை வாங்கின இடத்தையாவது சொல்லித்தொலைக்கறதுக்கென்ன?"

"இல்லே அருக்காணி... அந்தப் பணத்தை அகிலா அம்மா தான் குடுத்தாங்கங்கற உண்மையைச் சொல்லி அவங்களுக்குத் தீராத இடைஞ்சலைத் தர்றதவிட நான் திருடனாவே இருந்துட்டுப் போறேன்" என்ற கணேசன் முகம் பொத்திக் குலுங்கிக் குலுங்கி அழுதான்.

# இந்தச் சிரிப்புக்கு என்ன காரணம்?



**கே. எச். காந்தி:**

என் பிரண்டு ஒருத்தன் பஸ்ஸிலே லேடீஸ் ஸீட்ல ஒக்காந்துக்கிட்டுப் போயிட்டு இருந்தான். அவன் பயந்தது மாதிரியே பக்கத்துல ஒரு பெண் வந்து நின்னா. ஓரக்கண்ணால அவ புடவையைப் பார்த்த அவன் நிமிர்ந்து பார்க்காமலேயே இருந்தான். பார்த்தால் தானே பச்சாதாபம், எடம் குடுக்கணும்... ரெண்டு ஸ்டாப் தள்ளி அந்தப் பெண் — முன்னே போய் எறங்கப் போனா. நிம்மதியோட நிமிர்ந்து பார்த்த நண்பனுக்கு ஒரே ஷாக்! அது பெண்ணல்ல; அவர் லுங்கி கட்டின ஓர் ஆண்!



**ஜெயந்தி தேவதாஸ்:**

ரேஷன் கடை க்யூவிலே நின்னு ஒரே நாள்ல பாமாயில், அரிசி, கெரோஸின், சர்க்கரை எல்லாமே வாங்க முடிஞ்சது! அடேயப்பா! அன்னிக்கு நான் பட்ட சந்தோஷம்! அதை நினைத்தாலே சந்தோஷம் பொங்குது.



**ராமநாதன்:**

"தமிழ்ல ராமாயணம் எழுதினது யார்?"
"கம்பர்."
"இந்தியா கேட் எங்கே இருக்கு?"
"டெல்லி."
"உலகப் பொதுமறைன்னு எதுக்குப் பேர்?"
"திருக்குறள்."
"எவரெஸ்ட் சிகரத்தின் உயரமென்ன?"
"பாஸ்..."

— டெலிவிஷனில் க்விஸ் நிகழ்ச்சிகளெல்லாம் பார்க்கிறானா, தெரியாத கேள்விக்கு 'பாஸ்'னு சொல்லத் தெரிஞ்சுண்டிருக்கான் என் பேரன்!



**கிரேஸ் தேவசிகாமணி:**

என் அப்பா அந்தக் காலத்திலேயே சொல்வார்: "இப்ப சட்டைப் பையிலே பணம் போட்டுக்கிட்டுப் போய், கைப்பையிலே பொருள் வாங்கிட்டு வர்றோம். ஒங்க காலத்துல துணிப் பையிலே பணம் எடுத்துக்கிட்டுப் போய், சட்டைப் பையில் பொருள் வாங்கிக்கிட்டு வருவீங்க" என்பார். இப்ப கிட்டத்தட்ட அது மாதிரியே நடக்குது.



**எஸ். ஜெயந்தி:**

என் அத்தைப் பையன் ஃபோன் பண்ணினான். 'ஜெயந்தி உன் அம்மாவைக் கூப்பிடேன். எங்க அம்மா அவசரமாப் பேசணுமாம்'னான். இவனுக்கு என்ன இவ்ளோ அக்கறைன்னு யோசிச்சுப் பார்த்தேன். அப்புறந்தான் விஷயம் தெரிஞ்சது. ஹோம் ஒர்க்கையெல்லாம் முடிச்சுட்டானாம். அம்மா வேறே பாடம் படிக்கச் சொன்னாங்களாம். என் அம்மா கூட போன்ல பேசினா அவங்க மடெல்டா பேசிக்கிட்டிருப்பாங்க. டபாய்ச்சுடலாம்னு அவன் போட்ட பிளானை இன்னிக்கு நினைச்சாலும் சிரிப்பு வருது!

படங்கள், பேட்டி: பிரபுசங்கர்.

வாசகர் யோசனை: நெல்லை குரலோன், பொட்டல்புதூர்.



# சிவகாமியின் சபதம்



## பூர்வ கதை

சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் காஞ்சிமா நகரில் தர்ம மகா ராஜாதிராஜ மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி செங்கோல் செலுத்தி வந்தார். அவருடைய சாம்ராஜ்யம் தெற்கே பாண்டிய நாட்டு எல்லையிலிருந்து வடக்கே கோதாவரி நதிக்கரை வரையில் பரவியிருந்தது.

அக்காலத்தில் பாரத நாட்டிற்குள்ளே ஒப்பற்ற பெருமையுடன் விளங்கிய காஞ்சிமா நகரில் சம்ஸ்கிருத கடிகைகளும், சைவத் தமிழ் மடங்களும், பௌத்த வித்யாஸ்தானங்களும், ஜைனப் பள்ளிகளும் பெயர் பெற்றிருந்தன.

கீழைச் சோழ நாட்டிலுள்ள திருச்செங்காட்டாங்குடி என்னும் கிராமத்திலிருந்து பரஞ்சோதி என்னும் இளைஞன் காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்பதற்காக வந்தான். வழியிலே சந்தித்த நாகநந்தி என்னும் புத்த சந்யாசியுடன் அவன் ஒரு நாள் இருட்டிய பின்னர் காஞ்சிக்கோட்டைக்குள் பிரவேசித்தான். அதே தினத்தில், சளுக்க மன்னனாகிய புலிகேசி பல்லவ சாம்ராஜ்யத்தின் மேல் படையெடுத்திருக்கும் செய்தி வந்ததின் காரணமாக, ஆயனச் சிற்பியின் பெண் சிவகாமியின் நடன அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டது என்று ஜனங்கள் பேசிக் கொள்வது பரஞ்சோதியின் காதில் விழுகிறது.

ஆயனரும் சிவகாமியும் சிவிகையில் ஏறி வருகிறார்கள். அச்சமயம் மதம் பிடித்த யானை ஒன்று நெறிகெட்டு ஓடிவருகிறது. பரஞ்சோதி தான் கொண்டுவந்திருந்த வேலை மத யானையின் மீது எறிந்து அது தன்னை நோக்கித் திரும்பியதும் விரைந்தோடுகிறான். வெகு நேரம் இரவில் காஞ்சி நகர் வீதிகளில் அலைந்தபிறகு ஊர்க்காவலர்கள் அவனைச் சிறையில் அடைக்கிறார்கள். அன்றிரவே நாகநந்தி அவனைச் சிறையிலிருந்து தப்புவித்து இராஜவிஹாரம் என்னும் புத்தர் கோவிலில் உள்ள இரகசிய வழியின் மூலம் அவனைக் கோட்டைக்கு வெளியே அழைத்துச் செல்கிறார்.

திருநாவுக்கரசருக்கும் ஆயனருக்கும் பரஞ்சோதி ஓலை கொண்டு வந்திருந்தான். திருநாவுக்கரசர் காஞ்சியில் இல்லை என்று அறிந்து, அவன் புத்த பிக்ஷுவுடன் ஆயனர் வீடு செல்கிறான்.

ஆயிரம் வருஷம் ஆனாலும் அழியாத அஜந்தா வர்ணச் சேர்க்கை இரகசியத்தை அறிந்து வருவதற்காகப் பரஞ்சோதியைக் கிருஷ்ணை நதிக்கரையிலுள்ள ஸ்ரீ பர்வதம் என்னும் நாகார்ஜுன மலைக்கு அனுப்பலாமென்று நாகநந்தி சொல்கிறார். அச்சமயத்தில் மகேந்திர சக்கரவர்த்தியும், அவருடைய புதல்வர் மாமல்ல நரசிம்மரும் ஆயனர் வீட்டுக்கு வரவே, பிக்ஷுவும் பரஞ்சோதியும் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்து கொள்கிறார்கள்.

அதற்குச் சற்று முன்னால் ஆயனர் வீட்டுக்கு அ. உள்ள தாமரைக் குளக்கரையில் சிவகாமியும் குமார சக்கரவர்த்தி மாமல்லரும் சந்திக்கிறார்கள். சிவகாமியின் ஊடல் தீர்ந்த பின், அவள் நரசிம்மரிடம் வேலின் மேல் ஆணையாகத் தன்னை மறப்பதில்லை என்று வாக்குறுதி கேட்கிறாள். அப்போது பரஞ்சோதி ஆயனர் வீட்டிலிருப்பது மாமல்லருக்குத் தெரிகிறது. அந்த வீரனைக் கண்டு அவனுடைய வேலைத் திருப்பிக் கொடுக்க நரசிம்மர் விரைந்து செல்கிறார். ஆயனர் வீட்டில் அவனைக் காணாமல் ஏமாற்றமடைகிறார்.

ஆனால், புத்தர் சிலைக்குப் பின்னால் அவனும் பிக்ஷுவும் ஒளிந்திருப்பதைச் சக்கரவர்த்தி கண்டு கொண்டு வெளியில் வந்த பின் சத்ருக்னன் என்னும் ஒற்றனை வேவு பார்க்க ஏவுகிறார்.

சத்ருக்னனை ஏன் ஆயனர் வீட்டுக்கு அனுப்ப வேண்டும் என்று நரசிம்ம வர்மர் கேட்கிறார்.

'அங்கு பகைவர்களின் ஒற்றர்கள் இருக்கக்கூடும் என்பதற்கான அறிகுறிகளை நீ கவனிக்கவில்லையா? ஆயனர் வீட்டில் இருந்தபோது உன் கண்கள் என்ன செய்து கொண்டிருந்தன?' என்று சக்கரவர்த்தி கடிந்து கொள்கிறார்.

ஆயனர் வீட்டிலிருந்த போது தன் கண்கள் சிவகாமியின் கண்களுடன் காதல் மொழிப் பேசிக் கொண்டிருந்ததை எண்ணி முகம் சிவக்கிறார் நரசிம்ம வர்மர்.

# இருபத்து மூன்றாம் அத்தியாயம்

## இராஜ ஹம்சம்



நரசிம்மர் வெட்கமுற்றதைக் கண்டு அவருக்குத் தைரியம் சொல்பவர்போல் மகேந்திரர் கூறினார்: "நரசிம்மா! ஆயனர் வீட்டுக்குள் போனால் அங்குள்ள சிற்பச் சித்திர அதிசயங்களில் எவருமே கண்ணையும் பறி கொடுப்பது இயற்கைதான். நானே அப்படித்தான் மெய்ம்மறந்து விடுவது வழக்கம். இன்றைக்கு ஆயனர் வீட்டுக்குச் செல்லும் போதே சிறிது சந்தேகத்துடன் நான் சென்றபடியால் கூர்மையாகக் கவனித்தேன்...."

நரசிம்மர் தம் மனக் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு "கவனித்ததில் என்ன கண்டீர்கள், அப்பா? சிற்பங்களையும் சித்திரங்களையும் தவிர, ஆயனர் வீட்டில் வேறொன்றையும் நான் காணவில்லையே?" என்றார்.

"ஆயனரின் நடவடிக்கையில் உனக்கு எவ்விதமான சந்தேகமும் உண்டாகவில்லையா, நரசிம்மா!"

மாமல்லர் மௌனமாயிருந்தார்.

"அடிக்கடி அவர் கவலையுடன் புத்தர் சிலையின் பக்கம் திரும்பினாரே, அதைக் கவனிக்கவில்லையா?"

மாமல்லரின் கண்கள் அகன்று விரிந்தன.

"புத்தர் சிலைக்கு அருகில் நாம் சென்றதும், ஆயனர் தயங்கித் தடுமாறியதையும் நீ கவனிக்கவில்லையா?"

நரசிம்மர் திடுக்கிட்டவராய், "அப்பா! அந்தப் பெரிய புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் ஒருவேளை யாராவது மறைந்திருந்தார்களா, என்ன?" என்றார்.

"ஆம், நரசிம்மா! இரண்டு பேர் இருந்தார்கள்! அன்றிரவு இராஜ விஹாரத்துக்கு அருகில் ஒரு புத்த பிக்ஷுவையும் ஒரு வாலிபனையும் நாம் பார்க்கவில்லையா, அந்த இருவருந்தான்!"

"என்ன! அவர்களா ஆயனச் சிற்பியார் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்தார்கள்?"

"ஆம்; ஆனால், ஒளிந்து கொள்ளும் கலையை அவர்கள் அவ்வளவு நன்றாகக் கற்கவில்லை...."

"தங்களுக்கு மூன்றாவது கண் உண்டு என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும் அப்பா? ஆயனரின் வீட்டில் தாங்கள் அவ்வளவு நேரம் தங்கியது எனக்குச் சிறிது வியப்பை அளித்தது. இப்போது காரணம் தெரிகிறது!" என்று நரசிம்மர் பெருமிதத்துடன் கூறினார். மகேந்திரர் இதற்கு விடையொன்றும் கூறாமல் கால்வாயின் மேற்குத் திசையை நோக்கினார்.

திடீரென்று, "அப்பா! ஆயனர் வீட்டுக்கு நான் மறுபடியும் போய்வர விரும்புகிறேன்" என்றார், மாமல்லர்.

"எதற்காக, நரசிம்மா?"

"அந்த வாலிபனைப் பார்த்து இந்த வேலை அவனிடம் ஒப்புவிக்க வேண்டும். புத்த பிக்ஷுவுடன் அன்றிரவு நாம் பார்த்த வாலிபன்தான் இந்த வேலுக்குரியவன் என்று தாங்கள் சொன்னீர்கள் அல்லவா?"

"அன்று ஊகித்துச் சொன்னேன்; இன்றைக்கு நிச்சயமாயிற்று. ஆனால், அந்த வாலிபனுக்கு இந்த வேல் இனிமேல் தேவையில்லை, நரசிம்மா! அதோ போகிறதே, ஆயுதப் படகு. அதிலுள்ள பழைய வேல்களுடன் இதையும் நீ சேர்த்துவிடலாம்!"

"ஏன், அப்பா?"

"பரஞ்சோதி ஆயனரிடம் சிற்பக் கலை கற்கப் போகிறான்; அவனுக்கு வேல் வேண்டியதில்லை."

"பரஞ்சோதி, பரஞ்சோதி! — திவ்யமான பெயர்! அந்த வீர வாலிபனைப்பற்றி என்னவெல்லாமோ ஆசை கொண்டிருந்தேன். அவனை என் ஆருயிர்த் தோழனாகக் கொள்ள விரும்பினேன்!"

"அது நிறைவேறாதென்று நான் சொல்லவில்லையே!"

"எப்படி நிறைவேறும்? நம் பகைவர்களின் ஒற்றர்களுடன் நாம் தோழமை கொள்வது சாத்தியமா?"

"அந்த வாலிபனை ஒற்றன் என்று நான் சொல்லவில்லையே!"

"பின் எதற்காக அவன் ஒளிந்து கொண

அமரர் **கல்கி**

டான்?''

''அந்த வாலிபன் குற்றமற்றவன். அவனைக்கொண்டு அந்தக் கள்ள பிக்ஷு ஏதோ சூழ்வினை செய்யப் பார்க்கிறான் என்று தோன்றுகிறது. வாதாபி சாம்ராஜ்யத்தின் மகா சதுரனான ஒற்றன் அந்தப் பிக்ஷு என்று நான் ஊகிக்கிறேன்!''

''அப்பா! சில சமயம் தங்களுடைய நிதானப் போக்கு எனக்கு மிகுந்த வியப்பை அளிக்கிறது.''

''எதைப்பற்றிச் சொல்லுகிறாய், நரசிம்மா?''

''அன்றிரவே அந்தப் புத்த பிக்ஷுவைப் பற்றித் தாங்கள் சந்தேகம் கொண்டீர்கள். உடனே அவனை ஏன் சிறைப்படுத்தவில்லை? வெளியிலே விட்டு ஏன் வேடிக்கை பார்க்கிறீர்கள்?''

''அன்றிரவு சிறைப்படுத்தியிருந்தால், பல்லவ ராஜ்யத்துக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு பெரிய அபாயம் எனக்குத் தெரியாமல் போயிருக்கும்.''

''பெரிய அபாயமா?'' என்று கூறி நரசிம்மர் ஆவலுடனும் பரபரப்புடனும் மகேந்திரரை நோக்கினார்.

''ஆம்; அன்றிரவு நாம் புத்த பிக்ஷுவையும் வாலிபனையும் பார்த்தோம்; மறுநாள் காலையில் அவர்களை இராஜ விஹாரத்தில் காணவில்லை. ஆனால், அவர்கள் எந்தக் கோட்டை வாசலின் வழியாகவும் வெளியே போனதாகத் தெரியவில்லையல்லவா?''

''ஆமாம்!''

''அவர்கள் எப்படி மாயமாய் மறைந்திருக்கக் கூடுமென்று வியப்பாயிருந்ததல்லவா?''

''ஆம், அப்பா!''

''கோட்டைக்கு வெளியே போக ஏதோ கள்ள வழி இருக்க வேண்டும் என்று சந்தேகித்தேன். அந்தக் கள்ள வழி எங்கே இருக்கிறதென்று சற்று முன்னால்தான் தெரிந்தது.''

''அதைப்பற்றி யோசித்ததனால்தான் குதிரையை அவ்வளவு வேகமாய் விட்டுக் கொண்டு வந்தீர்களா?''

சக்கரவர்த்தி மௌனமாயிருந்தார்.

''கள்ள வழி எங்கே இருக்கிறது, அப்பா?''

''இராஜ விஹாரத்தில் புத்த பகவானுடைய விக்கிரஹத்துக்குப் பின்னால் பார்க்க வேண்டும், நரசிம்மா!''

சக்கரவர்த்தியின் அறிவுக் கூர்மையைப் பற்றி நரசிம்மர் அளவற்ற வியப்புக் கொண்டவராய்த் திகைத்து நிற்கையில், ''அதோ இராஜஹம்சம்!'' என்று மகேந்திரர் கூறியதைக் கேட்டு மேற்கே நோக்கினார். காஞ்சி நகர்ப் பக்கத்திலிருந்து மூன்று படகுகள் கால்வாயில் வந்து கொண்டிருந்தன. அவற்றில் நடுவில் வந்த படகு சங்கையொத்தவெண்ணிறமுடைய 'இராஜஹம்ச'த்தின் உருவமாக அமைக்கப்பட்டிருந்தது. அதில் ஒரு பக்கத்தில் அமைந்திருந்த தங்கச் சிங்காதனம் 'பளபள' வென்று மின்னிற்று. அதன் மேல் விசாலமான வெண் கொற்றக் குடை விரிந்திருந்தது. எல்லாவற்றுக்கும் மேலே பல்லவ சாம்ராஜ்யத்தின் ரிஷபக் கொடி கம்பீரமாய்ப் பறந்து கொண்டிருந்தது.

முதலில் வந்த படகும், 'இராஜ ஹம்ச'மும் பல கோட்டிகளைத் தவிர மற்றபடி வெறுமையாயிருந்தன. கடைசியாக வந்த படகில் பலர் அமர்ந்திருந்தார்கள்.

''ஆ! மந்திரி மண்டலத்தாரும் வருகிறார்களே! தாங்கள் வரச் சொல்லியிருந்தீர்களா?'' என்றார் நரசிம்மர்.

''ஆம்; இன்றைக்குத் துறைமுகத்தில் மந்திரி மண்டலம் கூடப் போகிறது. அதற்கு முன்னால் உன்னிடம் நான் சில விஷயங்கள் சொல்ல வேண்டும். அதோடு, உன்னிடம் ஒரு வாக்குறுதி கோரப் போகிறேன்'' என்றார் மகேந்திரர்.



நரசிம்மருக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவளான சிவகாமி தாமரைக் குளக்கரையில் அவரிடம் வாக்குறுதி கேட்டு வாங்கிக் கொண்டு ஒரு பூகூர்த்த நேரங்கூட ஆகவில்லை. அதற்குள் அவருடைய அன்புக்கும் பக்திக்கும் உரியவரான தந்தை வேறு வாக்குறுதி கேட்கிறார்.

இவ்விதம் மாமல்லர் யோசித்துக் கொண்டிருக்கும்போதே படகுகள் மூன்றும் அவர்கள் இருந்த இடத்தை நெருங்கின.

## இருபத்துநான்காம் அத்தியாயம்

# வாக்குறுதி

சக்கரவர்த்திக்குப் பின்னால் கால்நடையாக வந்த இராஜ பரிவாரங்களும் இதற்குள்ளே கால் வாயின் கரைக்கு வந்து விட்டன.

"மகாராஜாதிராஜ திரிபுவன சக்கரவர்த்தி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!" என்ற கோஷம் மந்திரி மண்டலத்தார் வீற்றிருந்த படகிலே யிருந்து கம்பீரமாக எழுந்தது.

"மகா ராஜாதிராஜ அவனிசிம்ம லளி தாங்குர சத்துருமல்ல விசித்திரசித்த மத்த விலாச சித்திரக்காரப்புலி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!" என்ற கோஷம் கரையிலிருந்து எழுந்தது.

"குமார சக்கரவர்த்தி மாமல்லர் வாழ்க!" என்ற கோஷம் இரு பக்கங்களிலிருந்தும் எழுந்து வானளாவியது.

சங்கங்களும், எக்காளங்களும் காது செவிடுபடும்படி முழங்கின. முரசங்களும் பேரிகைகளும் எட்டுத் திசையும் அதிரும்படி ஆர்த்தன.

மகேந்திர பல்லவரைத் தொடர்ந்து வந்த வீரர்கள் முன்னால் வந்த படகிலே ஏறி அமர்ந்தார்கள்.

சக்கரவர்த்தியும் குமாரரும் குதிரைகளை ஏவலாளரிடம் ஒப்பு வித்துவிட்டு, 'இராஜ ஹம்ச'த்தில் ஏறி வெண்கொற்றக்குடை யின் கீழ்த் தங்கச் சிங்காதனத்தில் அமர்ந்



தார்கள்.

படகுகள் மூன்றும் துறைமுகத்தை நோக்கிப் புறப்பட்டன.

வாத்திய முழக்கங்கள் நின்றதும், சக்கரவர்த்தி தம் குமாரரைப் பார்த்து, "நரசிம்மா! நான் உன்னிடம் வாக்குறுதி கேட்பதே உனக்கு விந்தையாயிருக்கும். அதற்கு நீ உடனே மறுமொழி கூறாததும் நியாயந்தான். விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமல் எந்த வாக்குறுதியும் கொடுக்கக் கூடாது. இராஜ்யம் ஆளும் பொறுப்பு உடையவர்கள் இதில் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" என்றார்.

"அதற்காக நான் தயங்கவில்லை, அப்பா! தாங்கள் என்னிடம் வாக்குறுதி கேட்க வேண்டுமா என்றுதான் யோசனை செய்து கொண்டிருந்தேன். எனக்குத் தாங்கள் கட்டளையிடுவதுதானே முறை? தங்கள் விருப்பத்திற்கு மாறாக எப்போதாவது நான் நடந்ததுண்டா?"

இந்த வார்த்தைகள் குமார சக்கரவர்த்தி இருதய பூர்வமாகக் கூறியவையானபடியால் அவருடைய நாத் தழுதழுத்தது.

மகேந்திரரும் உணர்ச்சி மிகுதியினால் சற்றுச் சும்மா இருந்து விட்டு, பிறகு கூறினார்: "பல்லவ சிம்மா! நான் எவ்வளவு கசப்பான கட்டளையிட்டாலும் நீ நிறைவேற்றுவாய் என்று எனக்குத் தெரியும். ஆனாலும், காரியத்தின் முக்கியத்தைக் கருதி உன்னிடம் வாக்குறுதி பெற வேண்டியிருக்கிறது. அதற்கு முன்னால் நான் உனக்குச் சில முக்கியமான விஷயங்களைச் சொல்லியாக வேண்டும். நாளை மறுநாள் நான் வடக்கே போர்முனைக்குக் கிளம்புகிறேன். எப்போது திரும்பி வருவேன் என்று சொல்வதற்கில்லை...."

"அப்பா! என்ன சொல்கிறீர்கள்? போர் முனைக்குத் தாங்கள் கிளம்புகிறீர்களா? என்னை இங்கே விட்டுவிட்டா?" என்று மாமல்லர் ஆத்திரத்துடன் கேட்டார்.

"நான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி விடுகிறேன், நரசிம்மா! பிறகு, நீ கேட்க வேண்டியதைக் கேட்கலாம்" என்று சக்கரவர்த்தி கூறியதும், நரசிம்மர் மௌனமாயிருந்தார்.

மகேந்திரர் பிறகு கூறினார்: இந்தப் புராதனமான பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்தம் என்று நடந்து வெகுகாலம் ஆகிவிட்டது. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நான் இந்த ராஜ்யத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன். பிறகு இதுவரை யுத்தம் என்பதே நடக்கவில்லை. என் தந்தை சிம்மவிஷ்ணு மகாராஜாவின் காலத்திலும் பெரிய யுத்தம் நடந்தது கிடையாது. அவருடைய ஆட்சியின் ஆரம்பத்தில், சோழ நாட்டுக்கும் பாண்டிய நாட்டுக்கும் நடுவில் புல்லுருவியைப் போலக் கிளம்பியிருந்த களப்பாள வம்சத்தை நிர்மூலம் செய்து உறையூர்ச் சிம்மாசனத்தில் சோழ வம்சத்தை நிலை நாட்டினார். அதன் பிறகு பல்லவ சைனியங்களுக்கு வேலையே இருக்கவில்லை! இப்போதுதான் முதன் முதலாக என் காலத்தில் யுத்தம் வந்திருக்கிறது. இதை என் இஷ்டப்படி நடத்துவதற்கு மந்திரி மண்டலத்தாரின் அநுமதி கோரப் போகிறேன். அதற்கு நீயும் அநுமதி கொடுக்க வேண்டும். இந்த யுத்தத்தில் வெற்றியோ தோல்வியோ, எது நேர்ந்தாலும் என் தலையோடு போகட்டும். உனக்கு அதில் பங்கு வேண்டியதில்லை...."

இத்தனை நேரம் பொறுமையுடன் இருந்த நரசிம்மர் இப்போது குறுக்கிட்டு, "அப்பா! தோல்வி என்ற வார்த்தையை ஏன் சொல்லுகிறீர்கள்? யுத்தத்தில் நாம் அடையக்கூடியது வெற்றி அல்லது வீர மரணந்தானே? அதில் எனக்குப் பங்கு எப்படி இல்லாமற் போகும்?" என்று கேட்டார்.

"வீர பல்லவ குலத்துக்கு உகந்த வார்த்தை கூறினாய், நரசிம்மா! வெற்றி அல்லது வீர மரணந்தான் நமது குலதர்மம். ஆனால், வீர மரணத்தை நாம் இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் தேடி அடைய வேண்டியதில்லை! ஒருவர் செய்த தவறுகளைத் திருத்த இன்

## மாதம் ஒரு தொகுதி

**திருவாடானைத் தொகுதி வாசகர்களே!**

**மாதம் ஒரு தொகுதி என்ற கல்கியின் திட்டத்தின்கீழ் நடந்த ஒன்பதாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி உங்கள் தொகுதி.**

**உங்கள் தொகுதி குறித்த கடிதங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 27.10.90.**

**— ஆசிரியர்**



## கட்டிக் கரும்பே, வெள்ளரிக்காயே!

அன்புக்குரியவர்களை நாம் கண்ணே கட்டிக் கரும்பே என்று கொஞ்சுகிறோம் அல்லவா? அதுபோல் பிரெஞ்சுக்காரர்கள் சிறு கீரையே என்றழைக்கின்றனர். அரபு நாட்டில் வெள்ளரிக் காயே என்கிறார்கள். சீனர்கள் லவங்கப்பட்டையே என்று கொஞ்சுகின்றனர். வெல்லப்பாகே என்பது ஜப்பானியர் கொஞ்சும் மொழி. இளந்தளிரே என்று இனிமையாக அழைக் கின்றனர் பின்லாந்து நாட்டினர். மலரே என்றழைப்பது கிரீஸ் நாட்டு வழக்கம். பிஸ்கட்டே என்பர் போலந்துக்காரர்கள்!

— எஸ். முகம்மது ஆகப்.



னொருவர் உயிர் வாழ வேண்டுமல்லவா? ஒருவருக்காகப் பழிவாங்குவதற்கு இன் னொருவர் இருக்க வேண்டுமல்லவா?"

"அப்பா! போர் முனையிலிருந்து ஏதோ ரொம்பவும் கெடுதலான செய்தி வந்திருக் கிறது; — அதனால்தான் இப்படியெல்லாம் தாங்கள் பேசுகிறீர்கள்!"

"ஆம், குழந்தாய்! கெடுதலான செய்தி தான் வந்திருக்கிறது! கங்கபாடிப் படை புலிகேசிக்குப் பணிந்து விட்டது. நரசிம்மா! வாதாபிச் சைனியம் வட பெண்ணையை நோக்கி விரைந்து முன்னேறி வந்து கொண் டிருக்கிறது."

"இவ்வளவுதானே, அப்பா? துடை நடுங்கி துர்விநீதனிடம் அது நாம் எதிர் பார்க்கக் கூடியதுதான். அதனால் என்ன? வட பெண்ணைக் கரையில் நமது வடக்கு மண் டலத்துச் சைனியம் அணி வகுத்து நிற்கிற தல்லவா? வேங்கியிலிருந்து என் மாமன் பெரும் படையுடன் கிளம்பி வருகிறா ரல்லவா?"

"நரசிம்மா! வேங்கி சைனியம் நமது உதவிக்கு வராது. புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் இன்னொரு பெரும் படையுடன் வேங்கியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறானாம்."

"ஆஹா! வாதாபி சைனியம் அவ்வளவு பெரிதா? நாம் மட்டும் ஏன்....?" என்று மாமல்லர் ஆரம்பித்து இடையில் நிறுத்திய போது, அவருடைய குரலில் ஏமாற்றம் தொனித்தது.

"அது என் தவறுதான். நரசிம்மா! என் வாழ்நாளில் இப்படிப்பட்ட ஒரு யுத்தம் வரு மென்று நான் எதிர்பார்க்கவில்லை. போர்க் கலையில் கவனம் செலுத்த வேண்டிய காலத்தையெல்லாம் ஆடலிலும் பாடலிலும் சிற்பத்திலும் சித்திரத்திலும் கழித்து விட் டேன்...."

"அதனால் என்ன, அப்பா! சற்று முன்னால் ஆயனர் சொன்னாரே? உலகத் தில் எத்தனையோ சக்கரவர்த்திகள் இருந் தார்கள்; மறைந்தார்கள். அவர்களுடைய பெயர்களைக்கூட உலகம் மறந்து போய் விட்டது. ஆனால் தங்களுடைய பெயரை என்றென்றைக்கும் உலகம் மறக்க முடியாது."

"ஆயினும், இந்த யுத்தத்தில் நாம் ஜயிக் காமல் போனால், மாமல்லபுரத்து மகத் தான சிற்பங்கள் எல்லாம் என்றைக்கும் நமது அவமானத்துக்கே சின்னங்களாக விளங்கும்!"

"ஒருநாளும் இல்லை. யுத்தத்தில் தோல்வி யடைந்து உயிரையும் வைத்துக் கொண் டிருந்தாலல்லவா தாங்கள் சொல்கிறபடி ஏற்படும்? போர்க்களத்தில் புறங்காட்டி ஓடி ஒளிந்து கொள்கிறவர்களையல்லவா உலகம் பழித்து நிந்திக்கும்? வீர மரணத் துக்கு ஆயத்தமாகயிருக்கும் போது, அவமானத்துக்கும் பழிக்கும் நாம் ஏன் பயப் பட வேண்டும்?" என்று மாமல்லர் ஆத்தி ரத்துடன் கூறினார்.

"முடிவில் போர்க் களத்தில் வீர மரணம் இருக்கவே இருக்கிறது. ஆனால், அதற்கு முன்னால் நம் பகைவர்களை வேரோடு அழித்து வெற்றியடையவே பார்க்க வேண்டு மல்லவா? அது அப்படி அசாத்தியமான காரியம் இல்லை. அவகாசம் மட்டுந்தான் வேண்டும்; வாதாபி மன்னன் யுத்த தந்தி ரத்தை நன்கு அறிந்திருக்கிறான், நரசிம்மா! ஆனாலும், முடிவில் அவனை முறியடித்து நாம் வெற்றி மாலை சூடுவோம்; சந்தேக மில்லை. இதற்கு உன்னுடைய பூரண உதவி எனக்கு வேண்டும். நான் சொல்லுவது உனக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அதன்படி நடக்க வேண்டும்..."

நரசிம்மர் மிக்க உணர்ச்சியோடும் உருக் கத்தோடும் தழுதழுத்த குரலில், "அப்பா! என்னிடம் தாங்கள் உதவி கோர வேண் டுமா? தாங்கள் என் அன்புக்குரிய அருமைத் தந்தை மட்டுமல்ல; என் உடல், பொருள்,







ஆவிக்கு உரிமையுடைய அரசர். எனக்கு எப்பேர்ப்பட்ட கட்டளையையும் இடுவதற்கு அதிகாரமுள்ள பல்லவ சாம்ராஜ்யத்தின் பிரதம சேனாதிபதி. எவ்வளவு கசப்பான கட்டளை வேண்டுமானால் இடுங்கள்; நிறைவேற்றக் காத்திருக்கிறேன்'' என்றார்.

மகேந்திரர் சற்று மௌனமாயிருந்தார். அப்போது கீழ்த் திசையில் சிறிது தூரத்தில் கடற்கரைத் துறைமுகத்தின் காட்சி தென்பட்டது. கப்பல்களின்மேல் கம்பீரமாகப் பறந்த ரிஷபக் கொடிகள் வானத்தை மறைத்தன. சற்று தென்புரத்தில் நெடுந்தூரம் பரவி நின்ற மாமல்லபுரத்துக் குன்றுகள் காட்சியளித்தன.

சிறிது நேரம் அந்தக் காட்சியில் கவனம் செலுத்திக் கொண்டிருந்த மகேந்திரர், சட்டென்று நரசிம்மரின் பக்கம் திரும்பி 'மாமல்லா! நாளை மறுநாள் நான் போர்க்களத்துக்குக் கிளம்புகிறேன், என்று சொன்னேனல்லவா? போர்க்களத்திலிருந்து திரும்பி வந்து இந்த மாமல்லபுரத்தில் நாம் ஆரம்பித்த சிற்ப வேலை பூர்த்தியாவதைக் காண்பேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது'' என்றார்.

நரசிம்மர் மௌனமாய் இருக்கவே, மகேந்திரர் மேலும் கூறினார்:

''அப்படி ஒருவேளை நான் திரும்பி வராவிட்டால் இந்தச் சிற்பப் பணியை நீதான் தொடர்ந்து நடத்திப் பூர்த்தி செய்ய வேண்டும்.''

''இந்த வாக்குறுதியைத்தானா என்னிடம் கோரினீர்கள்?'' என்று மாமல்லர் வெடுக்கென்று கேட்டபோது அவருடைய குரலில் ஆத்திரமும் வெறுப்பும் தொனித்தன.

''இல்லை; அதைக் கேட்கவில்லை. நான் ஒருவேளை போர்க்களத்திலிருந்து திரும்பி வராவிட்டால் எனக்காக நீ பழிக்குப் பழி வாங்கவேண்டும். புலிகேசியின் படையெடுப்பினால் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஏற்பட்ட அவமானத்தையும் பழியையும் துடைக்க வேண்டும்.''

''அது என் கடமையாயிற்றே? கடமையை நிறைவேற்றுவதற்கு வாக்குறுதி வேண்டுமா?''

''குமாரா! அவ்விதம் பழிக்குப் பழி வாங்குவதற்காக நீ உன் உயிரைப் பத்திரமாய்க் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.''

நரசிம்மர் மௌனமாயிருந்தார். இன்னும் ஏதோ வரப் போகிறதென்று அவர் கவலையுடன் எதிர்பார்த்ததாகத் தோன்றியது.

''குழந்தாய்! சென்ற ஐந்நூறு ஆண்டு காலமாக வாழையடி வாழையாக வந்திருக்கும் இந்தப் பல்லவ குலம், இனியும் நீடிப்பது உன் ஒருவனையே பொறுத்திருக்கிறது. உன்னிடம் நான் கேட்கும் வாக்குறுதி இதுதான்: நான் திரும்பி வரும்வரையில் அல்லது நான் திரும்பி வரமாட்டேன் என்று நிச்சயமாய்த் தெரியும்வரையில் நீ காஞ்சிக் கோட்டையிலேயே இருக்க வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் கோட்டைக்கு வெளியே வரக்கூடாது! இதோ என் கையைத் தொட்டுச் சத்தியம் செய்து கொடு'' என்று கூறி மகேந்திரர் தம் வலது கரத்தை நீட்டினார்.

நரசிம்மர் அவருடைய நீட்டிய கையைத் தொட்டு, ''அப்படியே ஆகட்டும், அப்பா! தாங்கள் திரும்பி வரும்வரையில் காஞ்சிக் கோட்டையிலேயே இருப்பேன்!'' என்றார்.

திடீரென்று தூரத்தில் சமுத்திரம் 'ஹோ' என்று ஆங்காரத்துடன் இரையும் பேரொலி கேட்டது.

மாமல்லரின் உள்ளத்திலும் ஆர்கலியின் அலைகளைப் போல் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்தன.

(தொடரும்)

# கிராமிய கீதக் குயில்கள்

சினிமாப் பாடல்களுக்கு இணையாகக் கிராமியப் பாடல்கள், தென் தமிழ் நாட்டில் பிரபலமாகி வருகின்றன. சமீபத்திய இந்த மறுமலர்ச்சிக்குக் காரண கர்த்தர்கள் விஜயலட்சுமி — நவநீதகிருஷ்ணன் தம்பதி. இவர்கள் விழா மேடைகளில் வழங்கும் கிராமியப் பாடல் நிகழ்ச்சிகள், பொது மக்களிடையே அமோக வரவேற்பைப் பெற்று வருகின்றன.

இந்த made for each other தம்பதி இருவருமே தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த போது நாட்டுப்புறப் பாடல்களின் பால் ஈர்க்கப்பட்டனர். டாக்டர் விஜயலட்சுமி கூறுகிறார்:

''தமிழர் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் ஊடுருவி நிற்கிறது இசை. தாலாட்டு முதல், ஒப்பாரி வரையிலான வகை வகையான இந்தப் பாடல்களையெல்லாம் நாகரிக வெள்ளம் அடித்துச் சென்று அழித்துவிடும் ஆபத்து நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. எனவே நாங்கள் இந்தக் கலைச் செல்வங்களைக் காப்பாற்றும் முயற்சியில் முழு மூச்சுடன் இறங்கினோம். தமிழ்நாட்டின் பட்டி தொட்டியெல்லாம் அலைந்து பாட்டு கேட்க ஆரம்பித்தோம். இருவரும் பேராசிரியர்கள் என்று சொல்லிக் கொண்டு எளிய மக்களை அணுகினால் அவர்கள் கூச்சத்தில் பின்வாங்கி விடுவார்கள் என்பதால் அந்தந்த ஊருக்குச் செல்லும் போது அவ்வூர் மக்களைப் போலவே நாட்டுப்புறப் பாணியில் உடை அணிந்து செல்வோம். அவர்களுடைய வழக்கு மொழியிலேயே பேசி, சகஜமாகப் பழகுவோம். அவர்களுடன் உணவருந்தி, அவர்களுடைய சுகதுக்கங்களில் பங்கு கொண்டு, அவர்கள் பாடும்போது கூடவே பாடுவோம். அப்புறம்தான் கூச்சம் விலகி அவர்கள் முழு உற்சாகத்துடன் பாடுவார்கள். நாங்களும் பாட்டை ஒலிப் பதிவு செய்து கொள்வோம். சில சமயங்களில் அவர்களுக்குத் தெரியாமலேயே ஒலிப்பதிவு செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படும். இவ்வாறு பல பாடல்களைச் சேகரித்து, நாங்கள் சேர்ந்து பாடிப் பாடிப் பயிற்சி பெற்று, இப்போது மேடைக் கச்சேரி செய்யும் அளவுக்கு முன்னேறியிருக்கிறோம்...''

நெற்றி நிறையக் குங்குமம் தரித்து வெற்றிலையால் சிவந்த வாயுடன் டாக்டர் விஜயலக்ஷ்மி பேசும் போது கூட அவரை அறியாமல் அவர் உச்சரிப்பில் கிராமிய வாடை வீசுகிறது; வாக்கியங்களின் ஏற்ற இறக்கங்களில் தெம்மாங்கின் இனிமை கமழ்கிறது!

— கட்டுரை, வண்ணப்படம்: யோகா





# ஒளிரும் இருட்டுகள்



நண்பருக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு உள்ளே வந்து உட்கார்ந்த போது தணிகாசலத்தின் மனம் குழம்பியிருந்தது.

''கவர்ன்மெண்ட் ஆர்டர் போடப் போறாங்களாம் தணிகாசலம். பார்வை இல்லாதவங்களால் ஆசிரியர் வேலை பார்க்க முடியாதாம். இது என்ன நியாயம்? செஞ்சு பார்க்கச் சொல்லி, முடியாட்டி தகுதி இல்லேன்னு சொல்லலாம். வாய்ப்பே கொடுக்காம 'உன்னால முடியாது போடா'ன்னா?''

''இதோ பாருங்க ராமையா, அரசாங்கத்துக்கும் பல பிரச்னைகள் இருக்கும்...''

''அது அவங்க விஷயம். முதல்ல நம்ம பக்க நியாயத்தை எடுத்துச் சொல்வோம். இதுக்கு முந்தி ப்ளைண்ட் வாத்தியார்களே இருந்ததில்லையா என்ன? இப்ப புதுசு புதுசா ஆட்சேபணை சொல்றாங்களே! காலேஜ் எஜுகேஷன் டைரக்டர்கிட்ட நீங்க எடுத்துச் சொல்லுங்க...''

''அவரும்தான் கவர்ன்மெண்ட் தீர்மானங்களை எந்த அளவுக்கு மாற்ற முடியும்?''

''முதல்லேயே முடியாதுன்னு முடிவு கட்டிடணுமா? அவர் உங்க நண்பர். சொல்லிப் பாருங்க. நம்மாலான முயற்சியெல்லாம் செஞ்சோம்ங்கிற திருப்தியாவது இருக்குமில்லே? எம்.ஃபில், பி.எச்.டியெல்லாம் ஆசையாப் படிச்சுட்டு வர்ற புத்திசாலி இளைஞர், இளம் பெண்களுக்கு வாய்ப்பே கொடுக்காம 'நீங்க ஆசிரியர் வேலைக்கு லாயக்கில்லே, போய் வெத்திலை

சோடாக் கடை வையுங்க'ன்னு எடுத்த எடுப்பிலேயே சொல்ல வேணாமே.''

— நண்பருடன் நடைபெற்ற உரையாடல் நினைவுக்கு வர, தணிகாசலம் சோர்வுடன் யோசனையில் ஆழ்ந்தார்.

**நா**ட்டில் படித்த, ஊனமில்லாத மக்களே ஆயிரக்கணக்கில் வேலையின்றித் திண்டாடும் இன்றைய நிலையில் பார்வையற்றவர்களுக்காகச் சிபாரிசு செய்வது சிரமம்தான். இத்தனைக்கும் பல நிறுவனங்கள் ஊனமுற்றவர்களுக்கு இட ஒதுக்கீட்டு அடிப்படையில் வேலை கொடுக்கவே செய்கின்றன. ஆனால் மற்ற ஊனங்களை விடப்



ஆர். சூடாமணி

பார்வை இழந்தவர்களின் நிலை மேலும் கஷ்டமில்லையா? பிறர் உதவியை நாட வேண்டிய கட்டாயம் இவர்களுக்கு அதிகமில்லையா?

ராமையா இந்த விஷயத்தில் இவ்வளவு அக்கறை காட்டுவதன் காரணம் தமக்குத் தெரியும் என்று தணிகாசலம் எண்ணினார். ராமையாவின் மகன் தயாளன் கண் பார்வை அற்றவன். ஆனால், என்ன அறிவுத் தீட்சண்யம்! இப்போது இருபத்தைந்து வயது நடக்கிறது. சமூக இயலில் எம். ஏ., பிறகு எம். ஃபில் முடித்து, இப்போது பி.எச்டி செய்து கொண்டிருக்கிறான். அடுத்தது உத்தியோகம். இதைப் பற்றிய கவலை அவனுக்கும் அவன் தகப்பனாருக்கும் இருப்பதில் வியப்பில்லை.

ஒரு தேர்ந்த அறிவாளிக்கு ஒரு சின்னக் குறை — அதுவும் அறிவுக்குச் சம்பந்தமில்லாத உடற்குறை — காரணமாக முன்னேற்ற வாய்ப்புக்கள் பறிபோவதா? அது, ராமையா சொன்னது போல், என்ன நியாயம்? எனினும் நடைமுறையில், பல பிரச்னைகள் உள்ளவர்களின் 'கேஸ்' சற்றுப் பலவீனமானது என்பதை மறுப்பதற்கில்லை. அதற்கு வாதாடுவது...

வேலை தேடும் கவலை. இதுதான் இன்றைய உலகின் பொது நோயா? அவர் வீட்டிலேயே இன்னும் சிறிது காலத்தில் அந்தத் தொற்று நோய் பரவப் போகிறது. அவர் மகன் இளங்கலை இறுதி ஆண்டு படிக்கிறான். பொறியியல் பயில விரும்பினான். மதிப்பெண்கள் போதவில்லை. பி. ஏ. பட்டம் வாங்கியபின் என்ன செய்யப் போகிறான்? வர்த்தகத் துறையில் முன்னணியில் இருக்கும் தம் செல்வாக்கால் வேலை கிடைக்கலாம். ஆனாலும் சுயத்தகுதிக்கு எதுவும் ஈடாகாது. இந்த தயாளன் விதி நிணித்த எல்லைகளை உடைத்துக் கொண்டு பிரகாசிக்கவில்லையா? அத்தகைய அறிவில் பத்தில் ஒரு பங்கு இருந்தால் கூடப் போதும். ஆனால் மணிவண்ணன், எந்த வகுப்பிலும் பின்தங்கவில்லையே தவிர, கல்வியில் சோபிக்கவில்லை. அவன் புத்தகத்தைத் தொட்டு அவர் பார்த்ததில்லை. ''ஏண்டா, படிக்கிறியா, சரியா?'' என்று கேட்டால், பதில் எப்போதும் ஒரு மலர்ந்த சிரிப்பு. ''ஓ, நல்லாப் படிக்கிறேனேப்பா! இப்போ கூட இத்தனை நேரம் ஒரு டெஸ்ட்டுக்குப் படிச்சிட்டு இப்பத்தான் புத்தகத்தை மூடி வைக்கிறேன்'' என்பான். ''உன் புத்தகம் இன்விஸிபிலாய்த்தான் இருக்கணும்'' என்பதற்கும் சிரித்து விட்டுப் போய்விடுவான்.

**இ**ப்போது நாலைந்து நாட்களாய்ப் பிள்ளையாண்டான் கண்ணிலேயே படவில்லை என்பது நினைவுக்கு வந்தது. ''நம்ம வீட்டுக் கழுதை எங்கே போயிடிச்சு சம்பகம்? கண்ணுலயே காணோமே?'' என்றார் மனைவியிடம்.

'நம்ம வீட்டுக் கழுதை' யார் என்று அந்த அம்மாளுக்குத் தெரியும். அதே நபருக்கு 'உருப்படாத பய,' 'என் உசிரை வாங்க வந்திருக்கிற கிரகசாரம்' போல் இன்னும் பல மாற்றுப் பெயர்கள் இருப்பதும் தெரியும்.

''அவன் காலேஜில் ஏதோ விழாவாம். அதுக்கான ஏற்பாடுங்க செய்யத்தான் இவனும் இன்னும் சில பசங்களும் மும்முரமாயிருக்காங்களாம்.''

''இந்த மாதிரி வெட்டி வேலைங்கன்னா துள்ளிக்கிட்டுக் கிளம்பிடுவானே! புத்தகத்தை எடுக்கிறதுன்னாத்தான் உடம்பு நோகும்.''

''சேசே, மணி ரொம்ப உழைக்கிறான்ங்க. வீட்டுக்கு வரக்கூட நேரமில்லையாம். அவங்க மாணவர் தலைவனுக்கு இவன்தான் வலது கையாம்.''

''அப்போ, அந்த மாணவர் தலைவன் இடதுகைவாகு ஆளாய் இருக்கணும்.''

எரிச்சலுடன் கூறிவிட்டுத் தணிகாசலம் உள்ளேயே புழுங்கினார். வரட்டும், அந்த வெறும் பயல். நாலு தட்டுத் தட்டி வைக்கலாம். படிப்பைக் கவனிக்காமல் விழா என்ன விழா?

ராமையா சொல்லிப் போன சங்கதி மனத்தில் ஏற்படுத்திய குழப்பத்தைத் தற்காலிகமாய் மறந்திருக்க உதவியது மகன் மேல் வளர்த்துக் கொண்ட கோபம்.

அலுவலகத்திலிருந்து 'கிளப்' சென்று இரவு பத்து மணியளவில் வீடு திரும்பிய போது மணிவண்ணனை ஹாலில் பார்க்க ஆத்திரம் வெடித்தது.

''ஏண்டா மணி, உன்னை என்ன வரவர வீட்லேயே காண்றதில்ல? இப்ப ஊர் சுத்திட்டுப் பின்னால பரீட்சையைக் கோட்டை விட்டே அப்புறம் பார்த்துக்க...''

''யார் ஊர் சுத்தறாங்க? அம்மா உங்ககிட்ட ஒண்ணும் சொல்லலையா? எங்க காலேஜ் மாணவர் மன்றத்துல ஒரு விழாவுக்கு ஏற்பாடு செய்துக்கிட்டிருக்கோம்...''

''ஏதானும் அரசியல் சார்பான விழாவாக்கும். உங்க மாணவர் தலைவன் எந்தக் கட்சி?''

மணிவண்ணன் எதுவும் பேசாமல் தகப்பனாரை ஒருகணம் நிதானமாய்ப் பார்த்தான். பிறகு,

''கட்சியையும் நீங்களே ஊகிச்சுக்குங்களேன். இவ்வளவு ஊகிக்கிறவருக்கு அது ஒன்றுதானா கஷ்டம்?''

''டே டே டே...!''

— வெற்று இடத்தைப் பார்த்துக் கூறிக் கொண்டிருந்தார் தணிகாசலம்.

அடுத்த இரண்டு நாட்களுக்கு இப்படியே மணிவண்ணன் தோன்றுவதும் மறைவதுமாய்த் தந்தையும் மகனும் கண்ணாமூச்சி ஆடிக் கொண்டிருந்தார்கள்.

''பயலுக்குக் கொழுப்பு ரொம்ப அதிகமாயிட்டுது'' என்று தணிகாசலம் பொருமினார். இடையில் ராமையாவிடமிருந்து ஃபோன் வந்தது.

''டைரக்டர் கிட்டப் பேசினீங்களா?''

''அது வந்து ராமையா... இன்னும் இல்லே... முதல்ல அவர் வீட்டுக்கு டெலிபோன் பண்ணி அப்பாயின்ட்மென்ட் கேட்டுக்கணும்...''

''சீக்கிரம் செஞ்சிடுங்க தணிகாசலம். ப்ளீஸ்.''

''ம் ம், அதுக்கென்ன... அதில ஒண்ணு பாருங்க....''

''நாம முயற்சி செய்யாம இருக்க வேணாம். இதை இப்பவே சரி செய்யாட்டி நாளைக்குப் பாதிக்கப்பட்டவங்களே கிளர்ச்சி செய்யும்படி ஆயிடும்.''

''அதுக்கெல்லாம் தேவையே இல்லே...''

''சொல்லிப் பார்க்கறீங்களா?''

''யாரோ கூப்பிடறாப்பல இருக்கு. ஃபோனை வச்சிடட்டுமா?''

— இந்த உரையாடலுக்குப் பின் மனசில் பொருமல் அதிகமாயிற்று. மூன்று நாட்களில் உடைப்பெடுக்கத் தயாராயிற்று.

வெளியே இருளும் வீடுகளில் விளக்கும் கொண்டு வரும் பின் மாலை நேரம்.

அரை மணி நேரமாய் ஹாலுக்குள் நடைபோட்ட தணிகாசலம் பொறுமை இழந்து ''ஏ சம்பகம், மணி ஏழாகுது. இன்னுமா அந்தத் தறுதலை காலேஜிலேந்து வரல்லே?'' என்று கத்தினார்.

''இன்னிக்குத்தான் விழாவாம். ஆச்சு, எல்லாம் முடிஞ்சு இப்ப வந்துடுவான்.''

''அவனை விட்டுக் கொடுக்க மாட்டியே! நீ எடம் கொடுத்துத்தான் அந்த உருப்படாத பய....''

வாசலில் ஒரு டாக்ஸி நின்றது. மணிவண்ணனும் இன்னொரு இளைஞனும் இறங்குவது தெரிந்தது. தணிகாசலம் வாசலுக்கு வந்த போது வண்டிக்குள் மற்றொரு இளைஞனும் சற்று வயதான ஒருவரும் உட்கார்ந்திருப்பதைக் காண முடிந்தது.

மணிவண்ணன் குனிந்து, டாக்ஸியிலிருந்த பெரியவரிடம் ''அப்போ நாங்க இறங்கிக்கிறோம் ஸார். அருண் உங்களை ட்ராப் பண்ணிட்டு வீட்டுக்குப் போவான்'' என்றான்.

''சரிப்பா மணி, உங்களுக்கெல்லாம மறுபடியும் நன்றி சொல்லிக்கிறேன். வேறென்ன சொல்றதுன்னு தெரியலே....''

''என்ன ஸார் இதெல்லாம்! நீங்க ஒத்துக்கிட்டதுக்கு நாங்கதான் நன்றி சொல்லணும்'' என்றான் மணியோடு இறங்கிய இளைஞன். 'குட் நைட்'கள் ஒலிக்க, டாக்ஸி கிளம்பிச் சென்றது.

வாசல் வராந்தாவில் நின்றிருந்த தணிகாசலத்தைக் கடந்த போது மணிவண்ணனும் அவன் நண்பனும் நின்றார்கள். மணி தந்தையைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

''ஹலோப்பா, இவன் என் ஃப்ரெண்ட் கோபால். இங்கே பக்கத்தில் தான் வீடு.

கொஞ்ச நேரம் என் கூடப் பேசிக்கிட்டிருந்துட்டுப் போவான். கோபால், இவர் என் அப்பா. வா, மாடிக்குப் போகலாம்'' என்று கூறி அகன்றான். அவனைத் தொடர்ந்து மாடிக்குச் செல்ல இருந்த கோபாலைத் தணிகாசலம் நிறுத்தினார்.

''ப்ளீஸ், கொஞ்சம் நில்லு தம்பி, இன்னிக்கு உங்க மாணவர் மன்றத்தில் விழாவா?''

''ஆமாம் ஸார், ரொம்ப நல்லா நடந்துது. மணிதான் அதுக்காக நிறைய உழைச்சான்.''

''இப்ப டாக்ஸியில் வந்தவர்...?''







''விழா நாயகன் அவர்தான்.''

''அரசியல்வாதிதானே?''

''என்ன ஸார் இது! மணி உங்ககிட்ட சொல்லலையா? அவர் எங்கள் கல்லூரியில் வரலாற்று உதவிப் பேராசிரியர். அவர் ஆஸ்திரேலியாவில் சிட்னி யுனிவர்சிட்டியில் பேராசிரியராகப் போகிறார். அதற்காகக் கல்லூரியில் பிரிவு உபசாரம் நடத்தினாங்க. நாங்க மாணவர்களும் தனியா எங்க மன்றத்தில் அவருக்கு ஒரு பாராட்டு விழா நடத்தினோம்.''

''அத்தனை அபிமானமா?''

''நிச்சயமா! எங்க பேராசிரியர்களில் அத்தனை பேரில் அவர்தான் தலைசிறந்தவர்னு எங்க கருத்து. அவ்வளவு நல்லா பாடம் நடத்துவார். போஸ்ட் டாக்டரேட் பண்ணியிருக்கார். பெரிய மேதை. எங்களுக்கெல்லாம் அவர்கிட்ட ரொம்பவும் அன்பு, மரியாதை.''

''அதுதான் வீடு வரை நீங்களே டாக்ஸியில் கொண்டு போய் விட்டீங்களாக்கும்!'' என்றார் தணிகாசலம் லேசான குத்தலுடன்.

''ஏதோ, எங்களாலான சின்ன உதவி. யு ஸீ, அவர் பார்வையில்லாதவர்.''

**கோ**பால் மாடிக்குச் சென்று வெகு நேரமான பிறகும் தணிகாசலம் அசையாமல் நின்றிருந்தார். இரத்தமேறி ஜிவுஜிவுத்த முகம் எளிதில் நிமிரவில்லை.

மணியிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். அதற்கு முன்பாக ஒரு முக்கியமான வேலை இருந்தது.

பலவீனமான 'கேஸ்' என்று எண்ணியிருந்தது மிகவலுவுள்ள 'கேஸா'கக் காட்சிதரும் போது...

மனசில் இப்போது குழப்பமே இல்லாமல் அவர் தொலைபேசி ரிஸீவரைக் கையிலெடுத்து எண்களைச் சுழற்ற ஆரம்பித்தார்.

**— பார்வையற்ற கல்லூரி மாணவர்கள் மற்றும் பட்டதாரிகள் அமைப்பின் ஒன்பதாம் ஆண்டு விழா மலரில் இடம்பெற்ற சிறுகதை.**



• தீபாவளிக்கு வீட்லே எல்லாம் பஃபே!
ஒரு வித்தியாசம்! ஹோட்டலே எல்லாம்
சமைச்சு வெச்சிருக்கும். இங்கே நாமே
சமைச்சுத் தட்டுலே போட்டுக்கணும்!
• இது 'பஃபே' இல்லே!.. பஃபே பஃபே!



ஒரு வருஷத்து எண்ணெய்
டப்பாவிலேருந்து ஒரு
கரண்டி எண்ணெயாவது
எடுக்காம விடப் போற
தில்லே!



• ஒரு வாரம் முன்னாடி வீட்லே முகமூடிக்
கொள்ளை! துணிமணி, பட்சணம், பட்டாசு
எல்லாம் போச்சு! என்ன பண்றது?
• ஒரு முழம் கருப்புத்துணி முகத்துலே
கட்டிக்கிட்டு நீங்களும் கொள்ளையடிச்
சுட்டு வாங்க!



மாப்பிள்ளை குவைட்லே மாட்டிக்கிட்டு
இருக்கார்! தீபாவளிக்கு வரமுடியாதாம்!
நல்லா கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டு
வந்திருக்கேன்!



மாமனார்கள் பேரணி நடத்தறோம்!
எல்லா மாமனார்களும் பேரணி
யிலே இந்தச் சீருடையோட
வரணும்!

# தீபாவளி நகை!


மணையிலே உக்காரச்சொல்லிட்டு உத்தரணி கரண்டியிலே தீர்த்தம் கொடுக்கறீங்க?
நல்லெண்ணெயும் சீக்காயும் கலந்த தண்ணி, தேச்சு ஸ்நானம் பண்ணுவாங்க!


மாப்ளே, ஒரு காரியம்! சும்மா பயப்படாம சுவர் ஏறிக்குதிச்சு அடுத்த வீட்டுக் கிணத்துலே தண்ணி இறைச்சு ஸ்நானம் பண்ணிட்டு வாங்க! இங்கே தண்ணி இல்லே!


தவணையிலே பட்டுப்புடவை வாங்கினேன். தவணையிலே சாயம் போகாம ஒரேயடியாப் போயிடுச்சு!


உங்கப்பா தீபாவளிக்கு எடுத்த துணிகளைப் பூம், பூம் மாட்டுக்காரனுக்குக் கொடுத்தேன்! அவன் வேணாம்னு தலை தெறிக்க ஓடறான்!


என்ன மாப்ளே! ஊருக்கா? துணிமணிகளை அடுக்கறீங்க?
என்னப்பா நீங்க! லாண்டரியிலே போடத் துணிங்களை அடுக்கறார்!

# காற்று அலைக்கழித்த காகிதம்



## COUNT DOWN — 12

### முன்கதைச் சுருக்கம்

தங்கை சாந்தினியுடன் தில்லி வந்து வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் அமீர் ஜவஹர் உண்மையில் பாகிஸ்தான் உளவாளி.

இந்திய ரகசிய சர்வீஸில் ஒரு முக்கியமான தலைமைப் பதவியில் இருக்கும் கர்னல் அருள்தாஸ், அவருடைய செயல்வீரன் அச்சுதன் — இருவரின் புத்திசாலித்தனமான வலையில் அமீர் ஜவஹர் சிக்குகிறான்.

தனது தந்தை பங்களாதேஷ்—பாகிஸ்தான் போர் நடந்த காலத்தில் இந்தியர்களால் கொல்லப்பட்டதாக இதுவரை நினைத்திருந்தான் அமீர் ஜவஹர். உண்மையில் அவரை இந்தியர்கள் பராமரித்து வந்திருப்பது தெரிந்ததும் அவன் இந்தியாவின் பக்கம் மாறுகிறான்.

பாகிஸ்தானுக்குள் புகுந்து ரகசிய மைக்ரோ ஃபிலிம்கள் அடங்கிய ஒரு டம்மித் துப்பாக்கியைக் களவாடி வருகிறான் ஜவஹர். இந்திய எல்லையில் ஜவஹரை மடக்கி அவனைக் கொன்று, அந்தத் துப்பாக்கியுடன் தப்பி விடுகிறான் இந்திய ராணுவத்தைச் சேர்ந்த கேப்டன் மணிமாறன். இவன் ஒரு பாகிஸ்தானிய கைக்கூலி.

அமீர் ஜவஹரை இழந்து தவிக்கும் தங்கை சாந்தினிக்கு ஆறுதல் சொல்லப் போகிறான் அச்சுதன் —

இனி......

"கரையேண்டா... நினக்கு ஞான் உண்டு."

அச்சுதனின் குரலில் அவளுடைய துக்கத்தின் வெப்பத்தைக் குறைக்கும் குளிரூற்று இருந்தது. சாந்தினி, ஆதரவான கைகளுக்குள் பஞ்சுடலை ஒடுக்கிக் கொள்ளும் புறா போல் உணர்ந்தாள்.

அச்சுதனின் அழுத்தமான விரல்களிலிருந்து தன் விரல்களை மெல்ல நீக்கிக் கொண்டாள். மனத்தில் தெளிவற்ற அச்சங்களை அழித்துக் கொண்டு ஒரு சந்திரோதயம். தளர்வுற்ற உடம்பைச் சுவரில் சாய்த்துக் கொண்டாள்.

உணர்ச்சிகளின் உத்தரவில் தான் சற்று அதிகப்படியாக நடந்து கொண்டு விட்டோமோ என்ற சந்தேகம் அச்சுதனைத் தாக்கியது. சற்றே பின்வாங்கி இடைவெளியை அதிகப்படுத்தினான்.

"என்னை என் அப்பாவிடம் விட்டு விடுங்கள்." சாந்தினியின் உதடுகளிலிருந்து வார்த்தைகள் உதிர்ந்தன.

"உன் அப்பாவா? அவரை நீதான் பார்த்தாயே? அவருக்கே இரண்டு பேர் துணை வேண்டியிருக்கிறது. உன்னை அவருடைய பொறுப்பில் எப்படி விட முடியும் சாந்தினி?"

"இந்த வீட்டில் தனியாக என்னால் இருக்க முடியாது."

"அப்பாவை விடப் பொறுப்பான ஒருவர் உன்னைக் கவனித்துக் கொள்ளக் காத்திருக்கிறார், சாந்தினி."

"யார், கர்னலா?"

"கர்னல் அருள்தாஸின் கம்பீரமான குரலையும், முரட்டுத்தனமான முகத்தையும் வைத்து அவரைப் பற்றித் தப்பான முடிவுக்கு வந்து விடாதே, சாந்தினி."

"எப்பொழுது என்னை அவரிடம் அழைத்துப் போவீர்கள்?"

"நீ சரி என்றால், இப்பொழுதே."

சாந்தினி விரல் நகத்தால் தரையில் கிறினாள். நிமிர்ந்தாள்.

"சரி!"

கர்னல் அருள்தாஸ் சாய்வு நாற்காலியில் மெலிதாக ஆடிக் கொண்டிருந்தார். அவரைச் சக்கர நாற்காலியிலேயே பார்த்துப் பழகியிருந்த சாந்தினிக்கு இந்தக் காட்சி ஆச்சரியமாயிருந்தது.

அச்சுதன் அவளுக்கென்று ஒதுக்கப்பட்ட அறையில் அவளுடைய பெட்டிகளை வைத்து விட்டுத் திரும்பினான்.

"உட்கார் சாந்தினி!" அருள்தாஸ் அவளுக்கொரு நாற்காலியைக் காட்டினார்.

உட்கார்ந்தாள், பங்களாதேஷிலிருந்து — பாகிஸ்தான், அங்கே நாஸரின் வீடு.

அப்புறம் அமெரிக்கா, அங்கிருந்து புது தில்லியின் இரைச்சல்களின் நடுவே வியாபாரம், அப்புறம் எப்பொழுதோ தொலைத்த அப்பாவின் சந்திப்பு, அம்மாவை நழுவி இழந்தது, கடைசியாக இப்போது இங்கே கர்னல் அருள்தாஸின் வீடு!

தரையோடு வீசும் காற்று, சேர்த்து இழுத்துப் போகும் ஒரு காகிதம் போலத் தன்னுடைய இருப்பிடம் நாளுக்கு நாள் உத்தரவாதமில்லாமல் மாறிக் கொண்டிருப்பதைச் சாந்தினி நினைத்தாள். அவள் கண்களில் நீர்ப் படர்ந்தது. முகம் திரும்பிக் கண்ணீரை ஒற்றினாள்.

மௌனத்தைக் கரைத்து விழுங்கியவர்கள் போலப் பல நிமிடங்கள் பேச்சின்றி உட்கார்ந்திருந்த பின்னர் அச்சுதன் தான் அதை உடைத்தான்.

''ஏதாவது ரிப்போர்ட் கிடைத்ததா, கர்னல்?''

''சற்று முன் தான் கேப்டன் யாதவிடமிருந்து போன் வந்தது, அச்சுதன்.'' கர்னல் பார்வையைச் சாந்தினியின் புறம் திருப்பியதும் சாந்தினி எழுந்தாள்.

''நீ உன் ரூமில் ரெஸ்ட் எடுத்துக்கொள், சாந்தினி. இது உன் வீடு. உனக்கு என்ன வேண்டுமோ, அதைக் கூச்சமில்லாமல் கேள்.''

சாந்தினி அவள் ரூமிற்கு நடந்தாள்.

அச்சுதன், சாந்தினியின் பாதம் கர்னலின் அறையில் மறையுமட்டும் ஆர்வத்துடன் பார்த்து விட்டுக் கர்னலின் புறம் திரும்பினான்.

''மணிமாறன் அபாரமான ஆள். குப்தாவின் ஜீப்பில் தப்பித்தவன். ஜீப்பை ஒரு கிராமத்தில் விட்டிருக்கிறான். தன் ராணுவ உடைகளை அவிழ்த்துப் போட்டு விட்டு கிராமவாசி போல் வேட்டி, ஜிப்பா முண்டாசுடன் கிளம்பியிருக்கிறான். அதற்கப்புறம் அவனைப் பார்த்தவர்கள் யாருமில்லை.''

''நான் அமீர் ஜவஹரை எடுத்து வர வேண்டியிருந்ததால் பொறுப்பை மற்றவர்களிடம் விட்டு விட்டு வந்தேன், கர்னல். ஆனால் என் மனம் முழுதும் மணிமாறனின் பின்னால்தான் இருக்கிறது. ஜவஹரை நான் பார்த்த நிலையில் நீங்கள் பார்க்கவில்லை.

ஓடும் ஒற்றர்களைத் துரத்துவது என்பது வளையைத் தேடி ஓடும் நண்டைத் துரத்துவது போல. மணல் பரப்பிற்குக் கீழே நண்டு போகுமுன் பிடித்தால்தான் உண்டு. தவற விட்டால், மணலைத் தோண்டிப் புரட்டித் தேடும் கூடுதல் வேலையும் சேர்ந்து விடும். அப்படித் தேடினாலும் நண்டு பிடிபடும் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இருக்காது.

— வி. விலாடிமீர்.

அஞ்சனா மைக்கேல்ராஜ்



அமீரைக் குரூரமாகச் சுட்டு விட்டுப்போன மணிமாறனைத் தப்ப விடக் கூடாது.''

''எந்தத் துப்பாக்கிக்காக அமீர் தன் உயிரையே தந்தானோ, அந்த ரகசியத் துப்பாக்கி நமக்கு அவசியம், அச்சுதன். மணிமாறன் பாகிஸ்தானுக்குள் நுழைந்து அதைத் திருப்பித் தர முடியாதபடி நாம் எல்லையை மூடி விட்டதால் நிச்சயம் அவன் இன்னொரு பாக் ஒற்றன் மூலம் அதைத் திருப்பியனுப்ப நினைப்பான்.''

''பாகிஸ்தானுக்காகச் செயல்படுபவர்கள் என்று நாம் சந்தேகப்படுபவர்களின் லிஸ்ட் தயாராயிருக்குமே, கர்னல்?''

''நானும் அதையேதான் நினைத்தேன். அப்படி சந்தேகப்படுபவர்கள் ஒவ்வொருத்தரையும் கண்காணிக்கச் சொல்லி நம் சர்வீஸிற்கு உத்தரவு கொடுத்து விட்டேன்.''

''மணிமாறனை நான் கண்டுபிடிக்க வேண்டும், கர்னல். எனக்கு நம்பிக்கையிருக்கிறது. அவன் எந்தக் கிராமத்தில் ஜீப்பைப் போட்டு விட்டுப் போனான்?'' இரு கால்களையும் பரப்பி நின்று கேட்டான், அச்சுதன்.

**ம**ணிமாறன் ரயில் நிலையத்தின் வாசலில் குதிரை வண்டியிலிருந்து இறங்கினான். குதிரைக்காரனிடம் காசு கொடுத்து விட்டு நிமிர்ந்தான். அதிர்ந்தான்.

ரயில் நிலையத்தின் வாயிலில் நின்றிருந்த பச்சைச் சீருடைகளை அவனால் உடனே அடையாளம் புரிந்து கொள்ள முடிந்தது. ஆர்மி போலீஸ்!

கர்னல் அருள்தாஸ் எத்தனை வேகத்துடன் செயல்படுகிறார் என்று வியந்தான். அவனை எதிர்பார்த்துத்தான் ரயில் நிலையத்தில் இந்தக் காவல் ஏற்பாடாகியிருக்கும் என்று அவனுக்குப் புரியாமல் இல்லை. ஜலந்தர் ரயில் நிலையத்திற்குள் அவன் நுழைந்ததும் சர்வ நிச்சயமாய் மடக்கி விடுவார்கள்.

வானத்தில் நிலவு உச்சிக்கு வந்திருந்தது. இரவு பத்தரை மணிக்கு தில்லி நோக்கி மெயில் ஒன்று புறப்படும். ஆனால் அது வரை காத்திருந்தால் கூட ஆபத்து. மணிமாறன் வேகமாகச் சிந்தித்தான்.

ஆகாயத்தை நோக்கி எழும் கரும்புகை, கரி என்ஜினை அடையாளம் காட்டியது.

ரயில்வே ஸ்டேஷனுக்குள் நுழையாமல் நடந்தான். ரயில் நிலையம் தாண்டி உயரமாய் வைத்திருந்த சிமெண்ட் கிராதியை அடைந்தான். ஜலந்தரின் இரும்பு ரேகைகளாக நிலவொளியில் மின்னிய தண்டவாளங்கள் தெரிந்தன. உண்டு களைத்த மலைப் பாம்பு போல் ஒரு மிக நீளமான கூட்ஸ் வண்டி கரிப்புகையைச் சுவாசித்துக் கொண்டு புறப்படுவதற்கான ஆயத்தத்தில் இருப்பது தெரிந்தது.

மணிமாறன் நின்றிருந்த இடத்தில் வெளிச்சம் இல்லை. இருளின் ஆதிக்கம் அவனுக்கு உற்ற நண்பர்களை விடவும் உதவி செய்தது. சிமெண்ட் கிராதியின் மீது சுலபமாக ஏறி மறுபுறம் இறங்கினான்: கூன் விழுந்த முதுகோடு தண்டவாளங்களைக் கடந்தான்.

கூட்ஸ் வண்டி இரவைக் கிழித்துக் கூவி விட்டு நகர்ந்தது. எக்ஸ்கர்ஷன் போகும் குழந்தைகளின் வரிசை போல் மூடியில்லாத பெட்டிகள் இன்ஜினைத் தொடரத் துவங்கின.

மணிமாறன் மிக லாகவமாக ஒரு பெட்டியின் பக்கவாட்டில் இருந்த இரும்புக் கம்பியில் தொற்றிக் கொண்டான்.

**அ**ம்பாலா கன்டோன்மென்ட் ரயில் நிலையத்திற்குச் சற்று முன்பாக மணிமாறன் பயணப்பட்ட கூட்ஸ் வண்டி நிறுத்தப்பட்டது. வெகு நேரமாகியும் அது புறப்படாததால் மணிமாறன் தன் இருப்பிடத்தை விட்டு வெளிப்பட்டு, எட்டிப் பார்த்தான். நிலக்கரியின் துகள்கள் அவன் உடம்பிலும், உடைகளிலும் ஒட்டியிருந்தன.

சிவப்பு சிக்னல் கோபத்துடன் முறைத்துக் கொண்டிருக்க, எதிர்ப்புறம் மிகுந்த வேகத்துடன் முன் விளக்கைப் பிரகாசமாக எரிய விட்டு வந்து கொண்டிருந்த எக்ஸ்பிரஸ் அடுத்த லைனில் வேகமாகக் கடந்த போது திடீரென்ற வேகத்துடன் வீசிய காற்றில் தலை முண்டாசுத் துணி மணிமாறனின் முகத்தை மூடியது.

எக்ஸ்பிரஸின் ஜன்னல் வழியே, கூட்ஸ் வண்டியை எந்தவித ஆர்வமும் இல்லாமல் பார்வையிட்ட பல்வேறு பயணிகளில் அச்சுதனும் ஒருவன். ஏதோ ஒரு பிளாட்ஃபாரஸ்டேஷனில் மணிமாறனைத் தவற விட்டதை அறியாமல் அவனைத் தேடி ஜலந்தரை நோக்கித் தொண்ணூறு கிலோ



## டிக்கெட்டில்லாப் பயணிகள் சங்கம்!

**இதில் அங்கத்தினராகி விட்டால் பிடிபடும் போதெல்லாம் இந்நிறுவனமே பணத்தைக் கட்டி, பிடிபட்ட பிரயாணியை விடுவிக்கும். ஆனால் இதன் அங்கத்தினர்கள் மாதாந்திரச் சந்தா கட்ட வேண்டும். இது, சீசன் டிக்கெட்டை விட மலிவாக இருப்பதால் இதில் சேர்கின்றனர் சட்டத்தைப் பற்றிக் கவலைப் படாத பம்பாய்வாசிகள்!**

**— ராஜீவி நரசிம்மன்.**



"ரொம்பக் கிண்டலா ஒரு கடிதம் வந்திருக்கு..."

"என்ன அது?"

"'சென்ற வார 'முன்னோட்டம்' நிகழ்ச்சி சிம்ப்ளி சூபர்ப். அதை மறு ஒளிபரப்பு செய்வீங்களா'ன்னு கேட்டிருக்கார்!"

— ஞா. ஞானமுத்து.

மீட்டர் வேகத்தில் அவன் போய்க் கொண்டிருந்தான்.

ஜலந்தர் சிடி ரயில் நிலையம்.

காலை ஏழு பதினைந்திற்கு இரும்புச் சக்கரங்களைத் தேய்த்து நிறுத்தத்திற்கு வந்த ரயிலில் இருந்து, தன் சிறு பெட்டியை எடுத்துக் கொண்டு அச்சுதன் இறங்கினான். காற்று பிளாட்ஃபாரத்தில் சுழன்று வீசியது. அங்கங்கே நின்று களைத்திருந்த பச்சைச் சீருடை மனிதர்களைக் கவனித்தான். ரயில் நிலையத்தை விட்டு வெளிப்பட்டான். மர நிழலில் நின்றிருந்த கேப்டன் யாதவ் அச்சுதனைப் பார்த்துப் பரிச்சயப் புன்னகையை வீசினார். கை குலுக்கினார்கள்.

''எனி லக்?'' என்றான் அச்சுதன்.

''நோ லக். அப்ஸொல்யூட்லி நோ லக்!'' யாதவின் முகம் புன்னகையை இழந்தது. ''மணிமாறன் வேறு மார்க்கமாகத் தப்பியிருந்தால்தான் உண்டு. ஜலந்தர் ரயில் நிலையத்திற்குள் அவன் நிச்சயம் நுழையவில்லை.''

''அவசரப்பட்டுக் காவலை எடுத்து விட வேண்டாம்'' என்றான் அச்சுதன்.

''மணிமாறன் சவாரி செய்த லாரியை மடக்கி விட்டோம். விசாரித்ததில் அவன் இங்கேதான் இறங்கிக் கொண்டான் என்று டிரைவர் சொன்னான். இதுவரை வெளியேறவில்லையென்றால் இந்த ஊரிலேயே எங்கோதான் ஒளிந்திருக்க வேண்டும்.

''ஒவ்வொரு வீடாகப் புகுந்து தேடப் போகிறாயா அச்சுதன்?''

''இல்லை. அதை விடச் சுலபமான வேலை இருக்கிறது. சந்தேக லிஸ்டில் மூன்று பேர்களைக் குறித்து வந்திருக்கிறேன். அவர்களைக் கண்காணித்தால் போதும் என்று நினைக்கிறேன். முக்கிய சந்தேகம் ஷர்மா, என்பவன் மீது. அவனை நான் கவனிக்கிறேன். மற்ற இரண்டு பேரையும் உங்கள் பொறுப்பில் விடுகிறேன், கேப்டன்.''

''ரைட்'' என்றார் கேப்டன் யாதவ்.

காலியாபாத்தின் அவுட்டரில் கூட்ஸ் வண்டி ஓய்ந்து நின்றபோது, விடியாத இருட்டில் கரி படிந்த முகத்துடன் ரயில் பெட்டியிலிருந்து வெளிப்பட்டு, சாக்கடைகளையும், தெருவோரக் குப்பைகளையும் கடந்து ஒற்றைச் சுழல் நாற்காலியுடன் இருந்த மலிவான சலூனில் நுழைந்த மணிமாறன், பத்து ரூபாயைக் கண்ணாடிக்கடியில் வைத்தான். ஆர்மி கிராப்பைத் தொட்டுக் காட்டி, ''இதை ஒரேயளவிற்குத் தலை முழுதும் ட்ரிம் செய்'' என்றான். மீசையைத் தொட்டுக் காட்டி ''பாதியாய்க் குறை'' என்றான்.

ஷர்மா வியர்வை நனைத்திருந்த சட்டையுடன் அந்த சந்திற்குள் தளர்ந்து நடந்தான். கடை வீதியின் பின்புறம் இருந்த சந்தில் நுழைந்ததும் நின்றான்.

அவனை யாரோ பின்தொடர்வது போல் உணர்வு.

சந்தை விட்டு வெளிப்பட்டு எதிர்ப்புறம் நடந்தால் தன்னை யாரும் தொடர்கிறார்களா என்று நிச்சயமாய்த் தெரிந்து கொள்ளலாம் என முடிவு செய்து அவன் சரேலெனத் திரும்பியதும் தொம்மென்று அச்சுதனின் மீது மோதிக் கொண்டான்.

''ஏய், பார்த்து வரக் கூடாது? உனக்குக் கண் குருடா?''

''உன்னைப் பார்க்கத்தான் வந்து கொண்டிருக்கிறேன் ஷர்மா,'' என்றான் அச்சுதன் குரலைத் தழைத்துக் கொண்டு.

''யார் நீ?''

''மணிமாறன் என்னை அனுப்பி வைத்தான்.''

''எந்த மணிமாறன்?''

''முட்டாள். தெரியாதது போல் நடிக்காதே. மணிமாறன் ஆபத்தில் இருக்கிறான். அவனுடைய முக்கியமான ஒரு பொருளை உன்னிடத்தில் விட்டு விட்டுப் போய்விட்டானாம். என்னை எடுத்து வரச் சொல்லி அனுப்பினான்.'' அச்சுதன் ஏற்கெனவே யோசித்து வைத்திருந்த பொய்யை அவிழ்த்து விட்டான். ஷர்மாவின் முகத்தில் மாறுதலைத் தேடி ஏமாந்தான்.

ஷர்மா அவனை ஏற இறங்கப் பார்த்தான். சங்கேத சைகை எதுவும் செய்யாத இவனை மணிமாறனின் ஆள் என்று ஏற்றுக் கொள்வதா, வேண்டாமா என்ற சிறு குழப்பம் அவன் கண்களில் கடந்து போனது.

''எந்த மணிமாறனையும் எனக்குத் தெரியாது'' என்றான் உறுதியாக.

''மணிமாறனின் உயிருக்கே ஆபத்து என்கிறேன், நீ சற்றும் அக்கறையில்லாமல் பேசுகிறாய்!''

ஷர்மாவின் குழப்பம் கூடியது. ''நீ மணிமாறனிடமிருந்துதான் வருகிறாய் என்று நான் எப்படி நம்புவது?'' என்றான்.

(தொடரும்)

# எளிதில் கிடைத்த ஆஞ்சநேயர் தரிசனம்!

**வட்டமேஜை**

• தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளில் ஒரு சில நஷ்டத்தில் இயங்குகின்றன என்பதால், அந்தத் திட்டம் முழுமையும் தோல்வி என்று ஒப்புக் கொள்வதற்கில்லை. பெரும் பண முதலைகளின் உறைவிடமாக இருந்த வங்கிகளின் வாசற்கதவுகள், வறியவருக்கும் எளியவர்க்கும் திறந்து விடப்பட்டது அரசுடைமைக்குப் பின்னர்தான். பாங்க் ஆப் தஞ்சாவூர், பாங்க் ஆப் தமிழ்நாடு போன்ற தனியார் வங்கிகள் சமீபத்தில் நிர்வாகச் சீர்கேடு காரணமாக தேசிய வங்கிகளோடு இணைக்கப்பட்டது நினைவில் இலையோ?

தஞ்சாவூர், எஸ். விஜயகுமார்.

• 'அரசுடைமையான வங்கிகளின் அவல நிலை' தலையங்கம் கண்டேன். அவ்வப்போது ஆட்சியில் வேறும் அரசியல் கட்சிகள் பொதுமக்களிடம் வோட்டுக்களைப் பெற, லோன் மேளா, கடன் தள்ளுபடி போன்ற ஆரோக்கியமற்ற திட்டங்களை அறிவித்ததன் மூலம் அரசுடைமை வங்கிகளை நோயாளிகளாக்கி விட்டன. மேலும் சரியான கவனிப்பு இல்லாததால் வங்கிகளின் செயல்பாடுகள் கவலையளிக்கும்படி உள்ளன. அரசு உடனடியாகத் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு சீரிய முறையில் செயலாற்றவில்லையென்றால் அரசு வங்கிகள் திவால் நிலைமைக்குத் தள்ளப்படுவது நிச்சயமே!

தக்கோலம், ஆ. புகாரி.

• போதையினால் ஏற்படும் தீமைகள் பற்றிய சிவசங்கரியின் விளக்கக் கட்டுரையைப் பள்ளிக் குழந்தைகளுக்குப் பாடமாக வைக்கலாம்.

கம்பம், மீ. ஷாஜஹான்.

• போதைப் பொருள்கள் மற்றும் அதனால் ஏற்படும் பேரழிவுகள் எவ்வளவு பயங்கரமானவை என்பதைப் படித்தேன். நம் நாட்டு இளைஞர்கள் வெளிநாட்டவருடன் போட்டியிட்டுத் தொழிலில் முன்னேறாமல், போதைப் பொருள்களிடம் அடிமையாவதில் முன்னேறுவதைப் படித்த போது வருங்கால இந்தியாவை எண்ணி வருத்தமாக இருந்தது. அரபு நாடுகளைப் போன்று, போதைப் பொருள்களை விற்பவர்களுக்கு மரண தண்டனை வழங்கினால் என்ன? பயிரில் களை எடுப்பது போல் இவர்களைக் களைந்து நாட்டைக் காப்பாற்றுவதில் தவறேதுமில்லை.

தக்கோலம், அஹமத்பாஷா.

• 'யசால் தோசை' சிறுகதை, இல்லாமையால் ஏங்கும் இதயத்தின் உணர்வுகளைக் கண்முன் நிறுத்தி, நெஞ்சை நெகிழச் செய்து விட்டது.

ஆவடி, க. கோபி.

• 'சிவகாமியின் சபதம்' தொடரில் ஓவியர் மணியம் தீட்டிய "அஜந்தா ஓவியங்கள்" படங்களைப் பார்த்தவுடனேயே மனத்தில் இனம்புரியாத ஒரு திருப்தியும், அதீதமான சந்தோஷமும் ஏற்பட்டன. ஏதோ, 'ஸஹாரா' பாலைவனத்தின் நடுவே 'லௌகந்திகா ரோஜா' துளிர்விட்டது போல் ஒரு குதூகலம்! மிகவும் குறைந்த செலவில் எங்களை அஜந்தா குகைக்கே அழைத்துச் சென்று விட்ட கல்கிக்கு எங்கள் மனமார்ந்த பாராட்டுக்கள்.

சென்னை — 28. வி. சங்கர் குடும்பத்தினர்.

• வாழ்க்கை என்ற பெயரில் இத்தனை இலக்கணங்கள் இருக்கின்றன என்பதையும், தனிமையை விட, சச்சரவும் பிரச்னையும் சந்தித்தால்தான் ஒரு மனிதன் உணர்வுகளையும் உறவுகளையும் புரிந்து கொள்ள முடியும் என்பதையும் அழகாகவே உணர்த்திவிட்டது 'சிவராமனும் ஐந்து நண்பர்களும்' சிறுகதை!

தஞ்சை, பா. நு. பிரகாஷ்.

• கடமலைப்புத்தூரில் மோட்டலில் உள்ள ஆஞ்சநேயர் தரிசனத்தை எளிதில் அமைத்துக் கொடுத்து விட்டீர்கள்!

சங்ககிரி, சே. ஜகந்நாதன்.

• தங்களுடைய பொறுப்பான கேள்விகளுக்கு எம். எல். ஏ. அவர்களின் பொறுப்பற்ற, சிறுபிள்ளைத்தனமான பதில்களைக் கண்டு மிகவும் வேதனையடைந்தேன். எப்படியோ, அவரைப் பற்றி இதுவரை அறியாத தொகுதி மக்களும் முழுமையாகப் புரிந்து கொள்ள ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தமைக்கு மிக்க நன்றி.

சேலம் — 7. எம். கே. சாமிநாதன்.

• கல்கி 7.10.90 இதழில் எனது பேட்டி இடம் பெற்றுள்ளது. நான் சொல்லாத செய்திகளைப் பிரசுரித்துப் பொது வாழ்வில் எனக்குக் களங்கம் ஏற்படுத்தியுள்ளீர்கள். தொகுதியில் உள்ள மக்களைச் சந்திப்பதைக் கௌரவக் குறைவாகக் கருதியிருந்தால் அதே தொகுதியின் மக்கள் எவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகளாகப் பொது வாழ்வில் என்னை ஏற்றுக் கொண்டிருப்பார்கள்? தொகுதியில் உள்ள விவசாய நிலத்தைத் தவிர வேறு தொழில் இல்லாததால், எனது நேரத்தை வேறு வகையில் செலவழிக்க வழியில்லை.

மேட்டூரிலிருந்து ஆத்தூர் செல்லும் குடிநீர் திட்டச் செலவு எவ்வளவு என்று உங்கள் நிருபர் கேட்டதாகவும், 'தெரியாது' என்று நான் சொன்னதாகவும் எழுதப்பட்டுள்ளதும் தவறாகும்.

சேலம், க. அர்ச்சுனன்.
தாரமங்கலம் தொகுதி எம். எல். ஏ.

(எம். எல். ஏ. அவர்கள் மீது நமக்குத் தனிப்பட்ட முறையில் விரோதம் ஏதுமில்லை. 'எம். எல். ஏ. கூறாத எதையும் தாம் எழுதவில்லை' என்று நமது துணை ஆசிரியர் இளங்கோவன் உறுதியளிக்கிறார். திட்டச்செலவு குறித்து எம்.எல்.ஏ. 'தெரியாது' என்றுதான் சொன்னார்; அச்சமயத்தில் எம். எல். ஏ. வைப் பார்க்க வந்திருந்த வேறு ஒருவர் தான் தொகையைக் குறிப்பிட்டார் என்பதாகவும் சொல்கிறார் நமது துணை ஆசிரியர். — ஆர்)

# கடைசியாய் ஒரு கனவு

கவிதா

"முடிவு பண்ணிட்டாயா? அப்புறம் மனசு மாறாதே?''

''பண்ணியாச்சுப்பா. எதையும் நிர யோசிச்சு முடிவு பண்ணணும். பண்ணினப்புறம் திரும்பிப் போகக் கூடாது. தீர்க்கமா இருக்கணும்னு நீங்கதானப்பா சொல்லியிருக்கேள்.''

ராமநாதன் அதிர்ந்து போனார். அவர் வார்த்தை கொண்டே அவருக்கு அடி. இத்தனை திடமாய், தைரியமாய் வளர்த்தது அவர் தவறா?

''சரி, கோ அஹெட். இன்னிக்கே போறதானால் போ, கல்யாணம் வரை இருக்கணும்னாலும் இரு. ஆனால் இன்னியோட பேச்சு சரி. நமக்குள் எதுவும் இல்லை. என் கனவு ஒண்ணு எறங்கியாச்சு, அவ்வளவு தான். எந்தக் காரணத்துக்கும் இந்த வீட்டு வாசல் என்னிக்கும் உனக்குத் திறக்காது. நானோ அம்மாவோ போயிட்டதாத் தகவல் காதுல பட்டால் உங்க வீட்டிலேயே ஒரு சொம்புத் தண்ணீர் விட்டுக்கோ தலையில். இங்கே வர வேணாம்!''

ராமநாதன் கண்ணாடியைத் துடைத்துப் போட்டுக் கொண்டார். நியூஸ் பேப்பரை எடுத்து வைத்துக் கொண்டார்.

கதவருகில் நின்று கொண்டிருந்த மாலா 'ஹக்'கென்று கேவல் எழும்ப அறைக்குள் புகுந்து கதவைத் தாளிட்டுக் கொண்டது அவருக்கு நிழலாய்த் தெரிந்தது. பேப்பரிலிருந்த எதுவும் மனசில் பதியவில்லை.

ராமநாதன் எழுந்து ஷர்ட்டை மாட்டிக் கொண்டார். சமையலறையை ஒட்டியிருந்த அறைக்குள் நுழைந்தார். இருட்டாய் இருந்தது. ஸ்விட்ச் போட்டார். அம்புஜம் ஜன்னலோரம் உட்கார்ந்து வெளியில் பார்த்துக் கொண்டிருந்தாள். வாய் ஏதோ பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

''யாரது?'' — திரும்பிக் கேட்டாள்.

''நான் கொஞ்சம் வெளில காலாறப் போய்ட்டு வரேன். என்னமோ ரொம்ப சோம்பலா இருக்கு. வந்து சாதம் போடறேன்.''

அவளுக்குப் புரிகிறதோ இல்லையோ, சொல்ல வேண்டியது அவர் கடமை. தாமே வகுத்துக் கொண்ட நியதிகள். இருபத்தைந்து வருடம் பழகிப் போன ஒழுங்குகள், சாப்பிடுகிற மாதிரி, தூங்குகிற மாதிரி.

''ஏன்னா, ரஞ்சனி நல்ல நட்சத்திரம் இல்லை?''

''நட்சத்திரம் இல்லை, ராகம்!''

இந்தப் பிசிறல்கள் சகஜம். நொடியில் இழை கோத்துக் கொள்ளும்.

''இந்த மாதிரி ராகத்தையெல்லாம் விஸ்தாரமா பாடக் கூடாது. ஒரு கோடிதான் காட்டணும். ரசிகன் அதுலேயே விழுந்து போகணும். பூரா சொர்க்கமும் காட்டினா மனுஷாளால் தாங்க முடியுமோ? இது நிறையப் பாடகர்களுக்குத் தெரிய மாட்டேங்கறதுன்னா.''

இது மாதிரி முத்துக்களும் சகஜம். ராமநாதன் வழக்கமான பிரமிப்புடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

''நான் பாட்டுல பேசிண்டே இருக்கேன். கச்சேரிக்கு நாழியாச்சே, கார் வந்துடும்''— அம்புஜம் நிஜமான கவலையோடு சொன்னாள்.

மெலிசாக ஜரிகையோடின பட்டுப் புடைவை. காதிலும் மூக்கிலும் பளிச்சிடுகிற வைரம். கடலாய் நிறைந்திருக்கிற மனிதர்கள். இதமாய்க் காற்று. கட்டிப் போட்ட நிசப்தம். கண்ணை மூடிப் பாடுகிறாள் அம்புஜம். பைரவி ராகம் கம்பீரமாய், அலை அலையாய் வருகிறது.

இது மாதிரி குறைப்பிரசவமான கனவுகள் அவளுள் ஏராளம். பிசிறல்களில்

அவ்வப்போது ஜாடையாய்த் தெரியும்.

''நீங்க போங்கோ சீக்கிரம். தேர் நிலைக்குத் திரும்பிடும்.''

— அம்புஜம் அவசரமாய்ச் சொன்னாள்.

அசடு! தேர் ஓடிப் போறதும நிலையை விட்டு. அலங்கோலத்தை அலங்காரம்னு நெனச்சிண்டு!



— ராமநாதன் பெருமூச்சோடு கிளம்பினார்.

மறுநாள் காலை. பத்து மணியிருக்கும். ராமநாதன் ஈஸிசேரில் உட்கார்ந்து ஷர்ட்டுக்குப் பட்டன் தைத்துக் கொண்டிருந்தார்.

மாலா வந்தாள். கையில் பெட்டியிருந்தது.

''நான் போயிட்டு வரேன்.''

''போறேன்னு சொல்லு.''

மாலா விருட்டென்று நகர்ந்து படியிறங்கிப் போனாள். செருப்பு அதிரப் போவதில் கோபம் தெரிந்தது.

சப்தம் தேய்ந்து போனதும் ஒரு நொடியில் 'சோ' வென்று போயிற்று. கை லேசாய் நடுங்க ஊசி விரலில் குத்தியது.

ராமநாதன் ஷர்ட்டைக் கீழே வைத்துவிட்டு எழுந்தார்.

அப்புறம் சரியாய் ஒரு வாரம் கழித்து ஒரு பகல் வேளை. கதவை யாரோ தட்டினார்கள்.

ராமநாதன் எழுந்து கதவைத் திறந்ததும் ஒரு மாமி சிரித்தபடி கேட்டாள்.

''உள்ளே வரலாமா?''

''ம்... நீங்க...''

''மாலா அனுப்பினாள். அவ அம்மா இருக்காளோன்னோ?''

ராமநாதன் தடுமாறி நிற்கையில் தடாலென்று உள்ளே போனாள் மாமி.

''மாமி எழுந்துருங்கோ. ஒரு பட்டுப் புடைவையும், சட்டையும் மட்டும் எடுத்துக் கோங்கோ. மாலா அழைச்சிண்டு வரச் சொன்னாள்'' என்றாள் அம்புஜத்திடம்.

''அவளுக்கு வேறே வேலை இல்லை போங்கோ.''

''இல்லே மாமி. நாளைக்குக் கல்யாணம் அவளுக்கு. முடிஞ்சதும் கொண்டு விட்டுடறேன்.''

ராமநாதனுக்கு எல்லாம் காதில் விழுந்தது. அம்புஜம் புடைவையை எடுத்து வைத்துக் கொண்டு அவள் பின்னால் போவது தெரிந்தது.

'அசடு. போ, போ. உன் பெண் குட்டைல விழுறாள். நன்னா விழுன்னு அட்சதை போடு!''

திடீரென்று அவருக்கு ஆயாசமாய் இருந்தது. மாலா இது மாதிரி செய்வாள் என்று கனவிலும் அவர் நினைக்கவில்லை.

இந்தப் பையனை எப்படிப் பிடித்தாள்?

பி.காம்., பெயில். வேலை வெட்டி இல்லை. ஏதாவது கடை வைக்கலாமா

என்று பார்க்கிறானாம்! வேறு ஜாதி. பெரிய குடும்பம். அப்பா, அம்மா, தம்பி, தங்கைகள். பார்க்கவும் சுமார். என்ன சுகத்தைத் தேடிப் போகிறான்? எம்.பி.பி.எஸ். படித்துக் கை நிறையச் சம்பாதிக்கிறவளை எப்படி மயக்கினார்கள்? எதிராளியின் மனதை நொடியில் அளக்கிற அவளின் புத்திசாலித்தனம் எங்கே போனது? எல்லோருமாய்த் திட்டமிட்டு மடக்கியிருக்கிறார்கள். இவள் கொண்டு வருகிற ஆயிரங்களில் சுகமாய்க் குளிர்காயப் போகிறார்கள்.

எத்தனை வைராக்கியமாய் இருந்தாலும் கஷ்டமாய்த்தான் இருந்தது. சதாரணமாகவா வளர்த்தார்? இரட்டை மாட்டு வண்டியில் ஒன்று நொண்டியாய் நிற்கையில் அடுத்த மாட்டுக்குச் சுமை இரட்டிப்புத்தான். சமைத்து, சாதம் ஊட்டி, தலைவாரி, குளிப்பாட்டி, பாடம் சொல்லித் தந்து, தூங்கப் பண்ணி...

எப்படி முடிந்தது அவளால் இந்த மாதிரி உதறி விட்டுப் போக?

**கா**லம் ஓடிப் போனது. அவ்வப்போது காதில் ஏதாவது சேதி விழும். மாலாவின் கணவன் பழக்கடை வைத்திருக்கிறான். மாலா ரொம்ப இளைத்திருக்கிறாள். ப்ராக்டிஸ் பண்ணக் கடன் போட்டுத் தனியாக அறை வாங்கியிருக்கிறாள்.

ராமநாதன் எல்லாம் ஒரு காதில் வாங்கி ஒரு காதில் விட்டார். அம்புஜம் மட்டும் அவ்வப்போது மாலா எங்கே என்று கேட்டுக் கொண்டிருந்தாள்.

**ஒ**ருநாள் மாலை. அனுமார் கோவில் பிராகாரத்தில் வந்து கொண்டிருந்த போது ஏதோ குரல் கேட்க ராமநாதன் அப்படியே நின்றார்.

''அட, மாலாவா? சௌக்யமா இருக்கியாம்மா? இப்ப எத்தனை மாசம்? ரொம்ப இளைச்சுப் போயிட்டியே.''

''........''

''உக்காந்துக்கோயேன். எத்தனை நாளாச்சு பாத்து!''

''ஆறு மாசம் ஆயிடுத்து மாமி! உக்காருங்கோ நீங்களும்.''

ராமநாதன் சுவரில் சாய்ந்து கொண்டார்.

''ஆனாலும் கல் நெஞ்சம்மா உங்கப்பாவுக்கு. பெத்த பொண்ணை யாராவது இப்படித் தலைமுழுகுவானோ. என்னதான் ஆகட்டுமே...''

''அப்பாவை ஒண்ணும் சொல்லாதீங்கோ மாமி.'' — குரல் பிசிறியது.

## "மீண்டும் படிக்க ஓர் ஏக்கம்!"

* அதிர்ஷ்டத்திலோ அல்லது லாட்டரி டிக்கெட்டுகளிலோ, காலம் சென்ற கல்கி அவர்களுக்கு நம்பிக்கை கிடையாது. இருந்தாலும் அதிர்ஷ்டத்தை மையமாக வைத்து 'அதிர்ஷ்ட தேவதை' என்ற பி. வி. ஆர். அவர்களது தொடர்கதையைக் கல்கியில் வெளியிட்டு, பல்லாயிரக்கணக்கான ரசிகர்களை மகிழ்வித்துள்ளீர்கள். இந்தத் தொடர்கதை என்னை மிகவும் கவர்ந்தது. ஆசிரியரின் கதை சொல்லும் நேர்த்தியும், அவர் படைத்த ரங்கன், ரமணி, மாலு, தாத்தா முதலிய பாத்திரங்களின் குணாதிசயங்களும், நேர்மைப் போக்கும் என்னை மிகவும் கவர்ந்தன.

சென்னை — 4. வெ. முத்துகிருஷ்ணன்.

* அப்பாவி ரங்கனுக்கு அடித்த அதிர்ஷ்டம் அடியோடு பறிபோக இருந்த தருணத்தில் அதைக் காப்பாற்றிக் கொடுத்த ரமணியின் நேர்மையை, பிறர் சொத்துக்கு ஆசைப்படாத தன்மையைப் புகழ்வதற்கு வார்த்தைகளே இல்லை. கதை நமக்கு வேண்டிய ஒருவர் வாழ்வில் நடப்பது போன்ற சாதாரணமான நிகழ்ச்சிகளைக் கொண்டதாக அமைந்தது அருமை. கதை முடிந்தவுடன் நெருக்கமானவர்களை விட்டுப் பிரிவது போன்ற நெகிழ்ச்சியை ஏற்படுத்தியது. தங்கமான கதைக்கு வைரப் பூண் போட்டது போல் அமைந்தது மாருதியின் ஓவியம்.

திருப்பரங்குன்றம். டி. கே. சுப்பிரமணியன்.

* தொடருக்கு ஒவ்வொரு வாரமும் படம் வரைந்த மாருதியின் கைவண்ணம் கண்ணைப் பறிப்பதாக இருந்தது.

மொரப்பூர். ச. உமர்கான்.

* கடந்த இருபத்தைந்து வாரங்களாக யாரிடம் செல்வது எனத் தடுமாறிக் கொண்டிருந்த அதிர்ஷ்ட தேவதை இருபத்து ஆறாவது வாரத்தில் ரமணி — மாலு திருமண தினத்தில் ரமணியிடமே வந்து சேர்ந்துள்ளதே. பாவம் ரங்கன்!

ஊத்தங்கரை. கவி. செங்குட்டுவன்.

* **பி.வி.ஆரின் 'அதிர்ஷ்ட தேவதை' என்ற தொடர் முடிந்ததில் மிகவும் வருத்தம். அருமையாக ஆரம்பித்தாலும் இறுதி அத்தியாயத்தில்** அருமையாக முடிந்தது வாசகர்களுக்கு நிறைவைத் தந்தது. அதை மீண்டும் ஒருமுறை படிக்கமாட்டோமா என்ற ஏக்கம் ஏற்படுகிறது.

திருச்சி — 20. பி. எஸ். கோவிந்தராஜன்.

* பி. வி. ஆரின் அதிர்ஷ்ட தேவதை தொடர் 26 வாரங்களாகச் சென்றதே தெரியவில்லை. ரமணியின் பாத்திரப் படைப்பு அற்புதம்.

சங்கராபுரம். ஜி. குசேலன்.



"எனக்கும் சுமை இருக்கு மாமி; எறக்கி வெக்க இன்னிக்குத்தான் வேளை வந்துருக்கு. நான் சொல்றதை மனசோட வெச்சிக்கறேளா?"

"ம்.... சொல்லு!"

"அப்பா தேவ புருஷன் மாமி. கல்யாணம் முடிஞ்சவுடனேயே அம்மாவுக்கு மூளை சரியில்லைன்னு தெரிஞ்சிடுத்தாம். தாத்தா நடுங்கிப் போய், 'பெரிசாத் தப்புப் பண்ணிட்டேன். க்ஷமிக்கணும். நான் அழைச்சிண்டு போயிடறேன்'னு சொன்னதும் அப்பா என்ன சொன்னாராம் தெரியுமா? 'சுமையை எறக்கி வெச்சிட்டேன். கவலைப்படாமப் போங்கோ...'ன்னு சொன்னாராம்! இன்னி வரைக்கும் அம்மாவைக் கண்ணா பாத்துண்டிருக்கார்! ஒரு நாள் கூட 'சீ'ன்னு வெறுத்துண்டது இல்லை. இதுதான் நமக்குன்னு அப்படி ஒரு திடம் மனுஷாளுக்கு வராது மாமி. என்னை வளர்க்க எத்தனை கஷ்டம் தெரியுமா? டெலிஃபோன் க்ளார்க்குக்கு என்ன சம்பளம் மாமி? அதுல என்னை இவ்வளவு படிக்க வெச்சார். அம்மா ஆஸ்பத்திரி செலவே ஆளை முழுங்கும். எத்தனையோ கடன் வாங்கினார். நான் சம்பாதிச்சுக் குடுக்கணும்னு பார்த்தேன்! ஆனால் அப்பா வரன் தேட ஆரம்பிச்சார். என்ஜினியர், டாக்டர்னு... டாக்டர் பொண்ணாயிருந்தாலும் யார் கட்டின புடைவையோட அழைச்சிண்டு போறா? அப்பா ஒருநாள் யார்கிட்டேயோ கேட்டுண்டிருந்தா — வீடு என்ன விலை போகும்னு! எனக்குத் தூக்கி வாரிப் போட்டுது. இருக்கிற ஒரு சொத்தையும் வித்துட்டு அம்மாவை அழைச்சிண்டு எங்கே போய் நிற்பார்கள்?

"அப்பத்தான் முடிவு பண்ணினேன்... கண்ணை மூடிண்டு விழலை. பட்டாளத்தைக் கரையேத்தறது சாமான்யமில்லை. ஆனா அப்பா பண்ணினதுக்கு முன்னாடி என்னுது தூசின்னு பட்டுது. அம்மா ஒரு சுமை போதும் அவருக்குக் கடைசி வரைக்கும்னு தோணித்து.. நான் நெனச்ச மாதிரியே அப்பா என்னை வெறுத்து ஒதுக்கிட்டார்.

"ஆனா இப்பல்லாம் சில சமயம் தோணறது அப்பா எனக்காகப் பட்ட கஷ்டமெல்லாம் விரயமாயிடுத்தோன்னு. நான் பண்ணது தப்பா சரியா? நீங்க சொல்லுங்கோ!"

— மாலா மூச்சு வாங்க நிறுத்தினாள்.

ராமநாதனுக்குக் கண்ணை இருட்டியது. பளீரென்று மின்னல் தெறித்தது. நெஞ்சில் கனம் தாங்க முடியாமல் இருந்தது.

# ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு!






















* ஏமாற்றம்?



* பின்னணி

# மு.க. முத்து அ.தி.மு.க.வில் சேர்ந்ததற்குப் பின்னணி என்ன?



* தாக்குதல்

* கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

? 'அயோத்தியில் ராமர் கோவிலும் பாபர் மசூதியும் ஒற்றுமையின் சின்னமாக ஏன் ஒரே இடத்தில் இருக்கக் கூடாது?' என்ற கருணாநிதியின் யோசனை குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

! அருமையான யோசனைதான். ஆனால் இவர் ஒரு மதத் தலைவராக இல்லாமல் அரசியல் தலைவராக இருக்கிறாரே, என்பதுதான் வருத்தம். இதையே ஒரு மதத் தலைவர் துணிந்து கூறினால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்!

* எல். ஆர். சப்தரிஷி, ஹோசூர்.

? கன்னட இயக்குனர் சங்கர் நாக் தம்முடைய சிறந்த படத்தின் (ஆக்ஸிடெண்ட்) பெயரிலேயே மறைந்தது குறித்து?

! மால்குடியை அப்படியே குட்டித் திரையில் கொண்டு வந்த சங்கர் நாகின் முடிவு, அவர் படங்களைப் போலவே மறக்க முடியாததாகி விட்டது.

* மீ. ஷாஜஹான், கம்பம்.

? பி. டி. உஷா நம்மையெல்லாம் ஏமாற்றி விட்டாரே?

! இல்லை, எதிர்பார்த்தவர்களை மட்டுமேதான் ஏமாற்றினார். அவர் சாதனையின் உச்சத்தை எட்டி, தற்போது இறங்கு முகத்தில் இருக்கிறார் என்பது பலரும் அறிந்த ஒன்று.

* ஆர். உதயா, சென்னை — 17.

? விவசாய சங்கத் தலைவர் திகையத் பேச்சைப் படித்தீரா?

! அந்த ஆள் அந்தப் பேச்சுக்காகவே உள்ளே தள்ளப்பட வேண்டியவர். நல்ல வேளையாக இட ஒதுக்கீடு எதிர்ப்பாளர்கள் அவர் பேச்சை சீரியஸ்ஸாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் துரதிர்ஷ்டம், ஆந்திராவில் இட ஒதுக்கீடு ஆதரவாளர்கள் அவர் சொன்னதைச் செய்து காண்பித்து விட்டார்கள். ஒரே ரெயில் பெட்டியில் பயணம் செய்த 40 பேர் நெருப்புக்குப் பலி! முன்பு பஞ்சாப், காஷ்மீர், அஸ்ஸாம் பிரச்னைகள் இருந்தன. இப்போது வி. பி. சிங் மண்டலைக் கிளறினாலும் கிளறினார், தேசமே பிரச்னையாகி விட்டது!

* சுரேஷ், செத்தோடு.

? ராஜீவ் காந்தியின் மிகப் பெரிய பலம் எது?

! நேருஜியின் பேரன்; இந்திராவின் மகன் என்பது. ஆனால் இந்தப் பலத்தை சரியான முறையில் பிரயோகிக்காமல் ஆணவத்தைக் காட்டுவது அவருடைய பலவீனம்.

* ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? இலவச அரிசித் திட்டம் திருத்தப்பட்டது குறித்து?

! காரணம் எதுவானாலும் அது ஒரு நல்ல

* விமர்சனம்



* பலம்!



முடிவு. முதல்வரை அதற்காகப் பாராட்டலாம். ஏழைகளுக்குக் குறைந்த விலையில் அரிசி கிடைக்கச் செய்யலாம்; இலவசமாக அல்ல. உழைக்காமல் உண்ணும் மனப்பான்மையை வளர்க்கும் எந்தத் திட்டமும் சரியல்ல.

* **வி. அருண், கிரமங்கலம்.**

**? நீங்கள் இட ஒதுக்கீடு ஆதரவாளரா? எதிர்ப்பாளரா?**

! இட ஒதுக்கீட்டுக்கு ஆதரவாளன்தான்; ஆனால் அது திட்டமிடப்படுகிற, அமுல்படுத்தப்படுகிற முறைகளுக்கு எதிர்ப்பாளன்.

* **கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.**

**? 'தமிழ்நாட்டில் முக்கிய மருத்துவமனைகளில் கூட மருத்துவ ஆவணங்கள் சரிவரப் பராமரிக்கப்படாமல் இருக்கின்றன' என்று டாக்டர் பி. ராமமூர்த்தி குறை கூறியிருக்கிறாரே?**

! ஆவணங்களைப் பராமரிக்கா விட்டால் போகட்டும், வந்து சேர்கிற நோயாளிகளை யாவது சரியாகப் பராமரிக்கிறார்களா; நோய்களை நிர்ணயிக்கும் கருவிகளைச் சரிவரப் பாதுகாக்கிறார்களா என்று பார்த்தால் அங்கேயும் ஏமாற்றம்தான். பி. ராமமூர்த்தி குறிப்பிடுவதும் இந்த அர்த்தத்தில்



பகல்...



...கனவு!

தான் இருக்கும். ஆவணங்கள் உருவாவதே நோயாளிகளின் பராமரிப்புக்குத்தானே!

* **சி. சந்திரசேகர், வேலூர்.**

**? 'மத்தியில் தேசிய முன்னணி ஆட்சி கவிழ்ந்துவிடும் என்று ஜெயலலிதா பகல் கனவு காண்கிறார்' — என்று பண்ருட்டியார் தெரிவித்திருப்பது பற்றி...?**

! ஜெயலலிதா காணும் பகற்கனவு ஒருவேளை நிறைவேறினாலும் நிறைவேறலாம்; பண்ருட்டியார் பகற்கனவு ஒரு நாளும் நிறைவேறப் போவதில்லை என்பதை எம். ஜி. ஆர். சிலைத் திறப்பையொட்டி நடந்த [illegible] [illegible] நிரூபித்திருக்கிறது.

* **பி. அ. முஸ்தபா கமால், தக்கோலம்.**

**? மு. க. முத்து, அ. தி. மு. க. வில் சேர்ந்ததற்குப் பின்னணிக் காரணம் தெரியுமா?**

! உட்கட்சிப் பூசல் பின்னணியில், உள் குடும்பப் பூசல் முன்னணிக்கு வந்ததுதான்!

## நீங்கள் கேட்டவை — தராசு

* **ஒஷோர், திருச்சி.**

**? சரணடைவதற்குச் சண்டையே மேல் என்ற ஈராக்கின் திட்டவட்டமான முடிவு பற்றி...?**

! ஈராக்கை யாரும் சரணடையச் சொல்லவேயில்லை. 'ஆக்கிரமிப்பை விலக்கிக் கொள்' என்றுதான் கேட்கிறார்கள். அதைச் செய்வதே ஈராக் நாட்டுக்கும் உலகுக்கும் நல்லது. இல்லாத பட்சத்தில் எந்தக் கணமும் வெடிக்கக்கூடிய போர், சொல்லொணாத் துயரத்தைப் பலகோடி மக்களுக்கு ஏற்படுத்தக்கூடும்.

* **எஸ். பாபு, மதுரை.**

**? ஐம்பெரும் விழாவின் போது வி. பி. சிங்குக்குக் கருணாநிதி வீட்டில் விருந்து. எம். ஜி. ஆர். சிலைத் திறப்பின் போது ராஜீவுக்கு ஜெயலலிதா வீட்டில் விருந்து.— போட்டி போட்டுக் கொண்டு நடக்கும் அரசியல் விருந்து பற்றி...?**

! 'ஏவ்'!

* **கே. கணேஷ், சென்னை — 16.**

**? பிரபல நாட்டியக் கலைஞர் யாமினி கிருஷ்ணமூர்த்தி, காவல் துறையினரால் தாக்கப்பட்டது குறித்து...?**

! இவர் போலீஸையும் போலீஸ் இவரையும் குறை கூற, உண்மை மறைந்து விட்டது. எவ்வாறாயினும், இரவில் நாட்டியப் பயிற்சி என்பது சுற்று வட்டார மக்களுக்குத் தொந்தரவுதான். இந்த விஷயத்தை அந்தக் குடியிருப்பில் உள்ளவர்களே தங்களுக்குள் சுமுகமாகப் பேசித் தீர்த்திருக்கலாம். போலீஸ் வர வேண்டிய அவசியமேயில்லை.

* **என். முருகேஷ், பெருஞ்சேரி.**

**? 'மற்ற மாநிலங்களில் மதுவிலக்கைக் கொண்டு வரட்டும்; நாங்களும் கொண்டு வருகிறோம்' என்கிறாரே, கலைஞர்?**

! 'அலை ஓயட்டும்; சமுத்திர ஸ்நானம் செய்கிறேன்' என்பது போலத்தான். அலைகளை எதிர்த்து நின்றால்தான் வீரம். 'பக்கத்து வீட்டுப் பையன் பாடம் படித்தால் நானும் படிக்கிறேன்' என்று உங்கள் மகன் சொன்னால் சும்மா இருப்பீரா?

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

எ. டி. விஜயகுமார்,
N5, வடக்கு பெருமாள் கோவில் வீதி,
ஈரோடு — 638 001.

# அறிவே, அழகே, உன்னை ஆராதிக்கிறேன்!

**26**

**ஆரோக்கிய ரகசியம்: வி. என். குமாரசாமி**

பிராணாயாமத்தின் பலன் பற்றியும், செய்யும் முறை பற்றியும் ஏற்கெனவே எழுதியிருக்கிறேன். ஏழு எட்டு வயதுச் சிறுவர்கள் கூட பிராணாயாமம் செய்யலாம். உபநயனம் முடிந்ததுமே சிறுவர்களுக்குச் சந்தியாவந்தனம், பிராணாயாம மந்திரம் முதலியன சொல்லித் தருவது ஆன்மிகத்துடன் ஆரோக்கியத்தையும் இணைத்த அற்புதம். ஆனால் இதெல்லாம் இன்று மறந்தே விட்டது! சந்தியாவந்தனமே பலர் செய்வதில்லை. அப்படியே செய்தாலும் மூக்கின் வலது இடதுபக்கம் விரலால் தொட்டு விட்டு, உள்ளங்கைகளை மூடி ஜபிக்கிறார்கள். இப்படி மூக்கைத் தொடுவதில் ஓர் அர்த்தமுமில்லைதான்; அனர்த்தம்தான்! செய்வதைத் திருந்தச் செய்தால்தான் பலன். வெறுங்கையால் ஆகாரத்தை எடுத்துச் சாப்பிடுவதாக பாவனை பண்ணிவிட்டால் வயிறு நிறையுமா? மூக்கைத் தொடுவதால் நுரையீரல் நிறையாது. பிராணாயாமம் ஒழுங்காய்ச் செய்தால்தான் நிறையும். பிராண சக்தி பெருகும். இதிலே இந்த இனத்தார்தான் செய்ய வேண்டும் என்று ஒரு தவறான கருத்து வேறு பரவிவிட்டது. எந்த ஜாதி — இனத்தாரும் செய்யலாம். சிரத்தையாகச் செய்தால், யார் செய்தாலும் மகத்தான பயன் உண்டு. கருத்தூன்றிச் செய்யாது போனால் பலன் பூஜ்யம்தான்.




மத்ஸ்யாசனத்திலும் பிராணாயாமத்தின் பலன் உண்டு. அதைவிடச் சற்று அதிகமாகவே உண்டு. பிராணவாயு நன்றாய் நுரையீரல்களின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் பரவுவதால் பிராணசக்தி ஏற்படுகிறது. காசம், ஆஸ்துமா, இருமல், சளி, ஜலதோஷம்போன்றவையெல்லாம் ஆசனங்கள் செய்து வருவோரைக் குறிப்பாகப் பிராணாயாமம், மத்ஸ்யாசனம் செய்து வருவோரின் கிட்டவே நெருங்க அஞ்சி ஓடும்!

சர்வாங்காசனம் செய்யும் போது முதுகெலும்பின் மேல்பாகம் முன்னுக்கு வளைகிறது. அதற்குப் பரிகாரமாக மத்ஸ்யாசனத்தில் கழுத்து, மார்பு, நடுப்பாகஎலும்புகள் பின்னுக்கு வளைகிறது. ஒன்றை ஒன்று ஈடுகட்டிவிட, அந்த எலும்புகளுக்குச் சாந்தி ஏற்படுகிறது. எனவேதான் சர்வாங்காசனம் செய்யும் நேரத்தில் கால் பாக அளவு கண்டிப்பாக மத்ஸ்யாசனம் செய்ய வேண்டும் என்பது.

இப்படி ஒன்றை ஒன்று ஈடுகட்டுகிற, சமன் செய்கிற அம்சம் எல்லா ஆசனங்களிலுமே உண்டு. அதனால்தான் ஆசனங்களை ஒன்றன் பின் ஒன்றாக வரிசைக் கிரமப்படி செய்து வரவேண்டும் என்பது.

நாம் இங்கு எழுதுவதெல்லாம் இளைஞர்கள் நோய் வராமல் தங்களைக் காத்துக் கொண்டு ஆனந்த வாழ்க்கை நடத்துவதற்காகவே. வயோதிகர்களும் நோய் உள்ளவர்களும் ஆசனங்கள் செய்யக் கூடாது என்பதில்லை. ஆனால் அவர்கள் யோகாசன நிபுணர்களின் நேரடி மேற்பார்வையில் செய்வதே நல்லது.

மத்ஸ்யாசனத்தைக் கர்ப்பமான ஸ்திரீகள் இரண்டு மாதங்கள் வரை செய்யலாம். அதன் பிறகு வேண்டாம். வயிற்றில் ஏதாவது ஆபரேஷன் நடந்திருந்தால் யோகாசன நிபுணர்களைக் கலந்து ஆலோசித்த பிறகு செய்ய வேண்டும்.

இனி, ஆசனங்களிலெல்லாம் தலைசிறந்ததான சிரசாசனம் பற்றிக் கூறுகிறேன். உடலுக்குச் சிரசே பிரதானம் என்பது போல் ஆசனங்களில் சிரசாசனம்தான் பிரதானமானது. உடலுக்குச் சிரசே பிரதானம் என்று ஏன் சொல்கிறோம்? சிலர், மூக்குதான் சுவாசிக்கிறது, அதுதான் முக்கியம்எனலாம்; சிலர், கண்தான் பிரதானமானது. அழகை நிர்ணயிப்பதும் கண்தான்

எனலாம்; சிலர், வாயும் முகவாயும்தான் முக்கியம் என்று அதற்குத் தக்க காரணம் சொல்லலாம். இவை எல்லாமே அழகாகவும், அமைப்பாகவும் இருந்து, மூளை மட்டும் சரியாக அமையவில்லை என்றால் என்ன பயன்? ஆகவே, இவை எல்லாவற்றையும்விட மூளையே பிரதானமானது என்பதில் ஐயமில்லை. சிறந்த அறிவாளியின் மூக்கு சற்றுக் கோணலாக இருந்தால் யாரும் பொருட்படுத்த மாட்டார்கள்! 'அதுவே ஓர் அழகு' என்று பாராட்டுவார்கள். வெற்றியாளனுக்கு ஒன்றரைக் கண் இருக்குமானால், 'அதான் அவனுக்கு அதிர்ஷ்டமடிக்கிறது' என்பார்கள்!

மகாத்மா காந்தியின் ஒவ்வோர் அவயவத்தையும் தனித்தனியே சாமுத்திரிகா லக்ஷணப்படி ஆராய்ந்து பார்த்தால் ஒன்றிரண்டுகூடத் தேறுவது கஷ்டம்! ஆனால் அவர் முகத்தைப் பார்த்தவுடன், அன்பு, அமைதி, அடக்கம், கடமை உணர்ச்சி போன்ற பல உயர்ந்த குணங்கள் பிரதிபலிப்பதாக எண்ணம் நமக்கு ஏற்படுவது மட்டுமல்ல, அந்தக் குணங்களை நாமும் பெற வேண்டும் என்ற ஆர்வம் கூட உண்டாகிறது! காரணம் என்ன? அவரது மூளை அவரது உள்ளத்தைப் பண்படுத்த, அந்த அகத்தின் அழகு முகத்தில் தெரிவதுதான். அந்தப் பொக்கைவாய்ச் சிரிப்புக்கு நாம் அடிமைப்பட்டுப் போகிறோம்!

இவ்வாறு மூளையானது ஒருவனது அறிவாற்றலை நிர்ணயிப்பதுடன், அதன் உடன் விளைவாக அவன் மனத்தையும் பண்படுத்துகிறது. மெய்யான அறிவாளி, தன் ஆற்றலை வெளிப்படுத்தும் போதே அடக்கமும் சாந்தமும் உள்ளவனாகவும் விளங்குவான். அரைகுறை ஆசாமிதான் பட்டாசு போல் படபடப்பான்!

ஆறறிவு என்பது மனிதனுக்கு மட்டுமே உரியது. அதை அவன் உபயோகிக்கும் விதத்தில் மனிதனாக வாழலாம்; தெய்வமாக உயரலாம் அல்லது மிருகமாகவும் மாறலாம்.

மூளை என்பது நரம்புகளின் குவியல். மண்டை ஓட்டினால் மூடப்பட்டு மிகப் பத்திரமாகப் பாதுகாக்கப்படுகிறது. முன் மூளை, மத்திய மூளை, பின் மூளை என்று இதில் பல பாகங்கள். இந்த நரம்புக் குவியலினூடே எண்ணற்ற சிறுசிறு ரத்த நாளங்கள் பின்னிப் பிணைந்து மூளைக்குத் தேவையான பிராணவாயுவை அளித்து வருகின்றன. மூளையுடன் தொடர்பில்லாத அவயவம் என்று உடலில் எதுவும் இல்லை. ஒவ்வொன்றுக்கும் மூளையில் இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. மூளையிலிருந்து



"ஆபரேஷனுக்கு அப்புறம் ஃபீஸைத் தரலாமா டாக்டர்...?"

"அதுக்கென்ன...? யாருகிட்ட வாங்கிக் கரெக்டாச் சொல்லிறதுன்னு சொல்லிடுங்க...

— ஆர். ரத்னசாமி.

உணர்ச்சி நரம்புகள் அந்தந்தப் பாகத்திலிருந்து புறப்பட்டு முதுகுத்தண்டில் சேர்ந்து முதுகெலும்பினூடே கீழே இறங்குகிறது. அப்படி இறங்கும் போதே கிளை விட்டுப் பிரிந்து, உடலின் எல்லாப் பாகங்களுக்கும் நரம்புகள் பரவுகின்றன.

பல காரியங்களை நாம் செய்யும் போது மூளையால் சிந்தித்துச் செயல்படுகிறோம். வேறு சில காரியங்களை ஓர் அவசரத்துக்கு முதுகுத்தண்டே உத்தரவிட்டுச் செய்து விடுகிறது! ஸ்கூட்டர் ஓட்டும் போது குறுக்கே யாராவது வந்து விட்டால், உடனே பிரேக்கைக் கால் அழுத்துவது தன்னிச்சைச் செயல். உத்தரவை எதிர்பார்த்து மூளை வரை விஷயம் போவதில்லை. கண் பார்த்தவுடனே முதுகுத்தண்டு வழியே கால் நரம்புகளுக்கு உத்தரவு பிறந்து விடுகிறது. அப்படிச் சுயாட்சி வழங்கப்பட்டுள்ளது! மூளைக்குப் பின்னால்தான் விஷயமே எட்டுகிறது. இந்தச் சுயாட்சியை, புத்திசாலித்தனமாக வழங்கியிருப்பதும் மூளைதான்! ஞாபக சக்தியை உள்ளடக்கியிருப்பதும் மூளைதான்.

இப்படிப்பட்ட முக்கியமான உறுப்பாகிய மூளைக்குப் போஷணைக்கு நன்றாக ரத்தம் பாய வேண்டும். சிரசாசனத்தின் போது மூளைக்கு நல்ல ரத்தம் தாராளமாகக் கிடைக்கிறது. எனவே, மூளையானது எப்போதும், எந்த வயதிலும் இளமையாகவும் ஆரோக்கியமாகவும், பலத்துடனும் இருக்கிறது. மூளை சக்தியோடு விளங்குகிறது என்றால் என்ன அர்த்தம்? நல்ல ஞாபக சக்தி, அறிவாற்றல், மற்ற அவயவங்களை அடக்கி ஆளும் திறன், முதலியன எல்லாம் பெருகுகிறது.

சிரசாசனம் செய்யும் விதத்தை அடுத்த இதழில் விளக்குகிறேன்.

(தொடரும்)

50

## சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!

●● பத்தாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த போது, ஒருநாள் தமிழாசிரியரின் இலக்கண வகுப்பு. இலக்கணத்தில் இறந்தகாலம், நிகழ் காலம், எதிர்காலம் இவைகளை நடத்திய ஆசிரியர், கடைசி வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு மாணவனைப் பார்த்து, "கடந்த வாரம் குடிநீர் நமக்குக் கிடைக்கவில்லை" — இது என்ன காலம்? என்று கேள்வி கேட்டார்! அந்தக் குறும்பு மாணவனோ எழுந்து நின்று, "இது வறட்சியான காலம்" — எனப் பதில் சொல்ல ஆசிரியர் உட்பட நாங்கள் அனைவரும் சிரித்து விட்டோம்.

— மலர்மதி, சின்னமனூர்.

• • •

●● நான் என் மனைவியுடன் சென்னையில் ஓர் ஆட்டோவில் செல்ல நேரிட்டது. அந்தச் சமயம் என் மனைவிக்குப் பிரசவ காலம். சென்னையின் சாலைகளோ மிகவும் மோசமாக இருந்தது. இந்நிலையில் ஆட்டோவும் மிக வேகமாகச் சென்றது. நான் எவ்வளவு சொல்லியும், ஆட்டோ டிரைவர் மெதுவாகச் செல்லவில்லை. பின் நான் பொறுமை இழந்து, பின்வருமாறு கூறியபின், சிரித்துக் கொண்டே மெதுவாக ஓட்டினார், டிரைவர். "உங்க ஆட்டோவுக்குப் பின்னால் 'பிரசவத்திற்கு இலவசம்'ன்னு இருக்கு. அதற்குப் பதிலாக, 'பிரசவமே இலவசம்'னு மாத்திடுங்க...!" என்றேன்.

— 'பிரதிபா,' சென்னை — 11.

• • •

"ஏண்டா டேய்... எத்தனை தடவை உன்னை 'உள்ளே' அனுப்பிச்சாலும் புத்தியே வராதா...? ம்...! இனிமேலாவது கொள்ளையடிக்கிற பணத்துல ஒரு பங்கை எனக்கு 'மாமூல்' கொடுத்துட்டு, 'ஒழுக்கமா' முறைப்படித் தொழில் செய்ங்க. திருந்தி வாழ முயற்சி செய்...!"



— கா.க.வே. ரோகிணி, கோவை—16.

• • •

# "காலை வாருவதில் நிகரற்றவர்கள்!"

●● ஒருநாள் கல்லூரியில் ஆங்கில வகுப்பில், 'Telephonic Conversation' என்ற தலைப்பில் ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அவர் அருகருகே உள்ள இரண்டிரண்டு மாணவர்களை எழுப்பி, ஒருவர் போன் பண்ணுவது போலவும் மற்றவர் போனை 'ரிசீவ்' பண்ணுவது போலவும் கருதி ஆங்கிலத்தில் உரையாடச் சொன்னார்.

எல்லோரும் திக்கித் திணறி ஆங்கிலத்தில் பேசிய போது, ஒரு மாணவரின் முறை வந்தது. அவர் எழுந்ததும், 'Is it 2233447' என்றார். உடனே அடுத்த மாணவர், "ஸாரி, ராங் நம்பர்!" என்றதும் வகுப்பே சிரிப்பில் மூழ்கியது.




ஆசிரியரும் அம்மாணவரின் நகைச்சுவை உணர்ச்சியைப் பாராட்டி உட்காரச் சொன்னார்.

— ஆர். வேணுகோபால், திண்டுக்கல்—5.

• • •

●● நானும் என் நண்பரும் ஒரு பேருந்தில் பயணம் செய்து கொண்டிருந்தோம். ஒரு ஸ்டாப்பில் ஏறிய ஓர் இளைஞர் ஃபுட்போர்டில் நின்று கொண்டு, "சார், டிக்கெட்" என்றார் கண்டக்டரை நோக்கி... கண்டக்டர் அமைதியாய்ச் சொன்னார்: "தம்பி, நீ அங்கே நின்னு டிக்கெட் கேட்டா மேல்லோகத்துக்குத் தான் கிடைக்கும்!"

— அம்மனூர் ப. வெற்றிச்செல்வன், அம்மனூர்.

• • •

●● நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது, கல்லூரி தமிழ் விரிவுரையாளர் பாடம் நடத்துவார். அவர் அதிகமாக ஜோக் அடிப்பார். காதலைப் பற்றிப் பாடம் நடத்திக் கொண்டிருந்த போது, மாணவரைப் பார்த்து, ''அன்புக்கும், காதலுக்கும் வித்தியாசம் என்ன என்று யாரும் காவது தெரியுமா?'' என்று கேட்டார். அப்போது ஒரு மாணவன் எழுந்து, ''பதில் நான் சொல்கி றேன். ஆனால் சொன்னால் தாங்கள் வருத்தப் படக்கூடாது'' என்றான். ஆசிரியர் ''சரி'' என்று சொல்ல, ''அன்பு என்பது நீங்கள் உங்கள் மகள் மீது வைத்திருப்பது. காதலென்பது நான் உங்கள் மகள் மீது வைத்திருப்பது!'' என்று சொன்ன வுடன் வகுப்பே சிரிப்பில் வெடித்தது!

— எம். மாறன், களப்பரம்.

• • •




●● நான் +2 படித்துக் கொண்டிருந்த போது, வகுப்புக்கு வந்த ஆங்கில ஆசிரி யர், ஏதோ ஒரு காரணத்திற்காகக் கார சாரமாகத் திட்டினார். கடைசியில், ''யார் அந்த முட்டாள்?'' என்று கேட்டு நிறுத்தி னார். பின் பெஞ்சில் தூங்கிக் கொண்டி ருந்த ஒரு மாணவனைச் சக மாணவன் 'NSSக்குக் கூப்பிடுகிறார்கள், கை தூக்கு' என்றான். அவனும் அரக்கபரக்க எழுந்து கை தூக்கினான். வகுப்பில் சிரிப்பலை எழுந்தது.

— பி. இராமசுப்பிரமணியன்,
திண்டுக்கல் — 7.

• • •




''நீங்கதான் சாப்பிட்டதுக்கு மாவாட் டிட்டீங்களே... இன்னும் ஏன் மாவாட்ட றேன்னு சொல்றீங்க?''

''இது பார்சலுக்கு!''

— ஜி. பாஸ்கரன், சென்னை — 53.

• • •

●● பெஞ்சில் ஏசியாட் பற்றிப் பேசிக் கொண் டிருந்தோம். இந்தியாவிற்கு ஒரு தங்கமாவது கிடைக்குமா என்று ஆதங்கப்பட்டுக் கொண்டி ருந்த போது, ஒரு நண்பர், ''கபடியில் தங்கம் கிடைக்கலாம்...'' என்றார். ''கிடைக்கலாமாவா? கண்டிப்பாகக் கிடைத்தே ஆக வேண்டும்'' என் றார் மற்றொரு நண்பர். அவருக்கு விளையாட் டுக்களில் ஆழ்ந்த ஈடுபாடு கிடையாது. சந்தேகத் துடன், ''எப்படிச் சொல்கிறீர்கள்?'' என்றேன். ''காலை வாருவதில் இந்தியருக்கு நிகராக உலகில்



யார் இருக்கிறார்கள்?'' என்றார் அமைதியாக! குபீர் சிரிப்பிற்குக் கேட்கவா வேண்டும்?

— கே. மனோகரன், கோவை — 43.

# இடுக்கண் வருங்கால் நகர்க...

படுத்திருந்த கணவனை எழுப்பினாள் நிரஞ்சனா. ''என்னங்க... என்னங்க... உங்களைத்தான். கொஞ்சம் எந்திரிங்க...'' குரல் உயர்த்தினாள்.

மெதுவாக ஓணான் போல் தலை உயர்த்தினான் பரணிவாசன்.

''என்னடி அவசரம்? தூங்குறவனை எழுப்புற?''

''அவசரம்தான். தொல்லைப் பக்கமே போக முடியலைங்க. பின்னாடி, அவன் தான் இன்னாசி முத்து — கொட்டகை போட்டுக்கள்ளச் சாராயம் மதுக்கசாயம் வித்துக்கிட்டு இருக்கான். சந்தைக் கடை மாதிரி ஒரே சப்தம். கெட்ட கெட்ட பேச்சு பேசிக்கிட்டுச் சண்டை வேற... தாங்க முடியல்ல...''

''கவலைப்படாதே. நேரா போய் அந்த இன்னாசி முத்தை நாலு வாங்கு வாங்கறேன்...''

தலையில் அடித்துக் கொண்டாள் நிரஞ்சனா.

''அய்ய! நான் உங்களைப் போய்க் கேக்கச் சொல்லலே. அந்த இன்னாசி முத்து ஒரு மாதிரியானவன். இப்பத்தான் அம்பத்தி ஆறாவது தடவையா ஜெயில்லேயிருந்து விடுதலையாகி இருக்கான்!''

''வேறென்ன செய்யச் சொல்ற நிரஞ்சி?''

''மாசம் பொறந்தா களையா வாடகை நானூறு ரூபாய் வாங்கறாரே பூதலிங்கம்... அவர் கிட்டச் சொல்லி இன்னாசி முத்தைக் காலி பண்ண வையுங்க...''

''அவர் ஒரு தொடை நடுங்கி. அநியாயத்தை யார் தட்டிக் கேட்டால் என்ன? நியாயம் பொறந்தா சரி. நானே போய்க் கேக்கறேன்.''

''கேளுங்க வேணான்ல. ஆனா கொஞ்சம் அடக்கி வாசிங்க.''

''சரி நிரஞ்சி!''

பரணிவாசனைப் பார்த்ததும் ஏக அமர்க்களமாய் வாவேற்றான் இன்னாசி முத்து.

''வாங்க தலைவரே! வாங்க வாங்க.''

''இன்னாசி முத்து! உன் கூடக் கொஞ்சம் பேசணும். வெளியே வரியா?''

''உள்ளவே பேசலாம். ஏன் இந்த மாம்பழ வாசனை உனக்குப் புடிக்காதா?''

''தயவுசெஞ்சு வெளியே வா!''

இன்னாசி முத்து எழுந்து வெளியே வந்தான். கடைசிப் புகையை இழுத்து விட்டுப் பீடியைக் கொலை செய்தான்.

''சொல்லுங்க...''

''நீ செய்யறது நியாயமா?''

''ஏன்? மத்தக் கடைகளை விட நான் சரக்கை விலை குறைச்சுத்தானே விக்கறேன்...''

''இன்னாசிமுத்து! விளையாடாதே! ஒரு வாழுற வீட்டுக்குப் பின்னாடி நீ பாட்டுக்குக் கொட்டகை போட்டுக்கிட்டுச் சாராயம் கிராயம் வித்துக்கிட்டு இருக்கியே, சரியா?''

விகாரமாகச் சிரித்தான் இன்னாசி முத்து.

''குடி மக்களுக்கு நான் செய்யுற சேவையைப் புரிஞ்சுக்காம பேசறீங்க பரணி. மலிவு விலை மது பாக்கெட் அஞ்சு ரூபாய்க்குக்



கூட கெடைக்காம அவனவன் அவதிப்படு றான். நான் மனசு பொறுக்காம அது இதுவெல்லாம் கலந்து 21 நாள் ஊறவைச் சுக்காய்ச்சி, நியாயமான விலையில் வித்துக் கிட்டிருக்கேன். அது புடிக்காம யாரோ உங் களைத் தூண்டி விட்டுருக்காங்க பரணி...''

''அட ஏய்யா என் வீட்டுக் கொல்லைல விக்கற? அது தான் கேள்வி!''

''நீங்க 'எதுக்கு அடி போடுறீங்கன்னு புரியுது. பரணி! நீங்க தினமும் இலவசமா இங்கே குடிச்சுக்கலாம். மாசம் அம்பது ரூபாய் கொடுத்திடுறேன். கண்டுக்காதீங்க...''

''நான் ஒண்ணு கேட்டா நீ ஒண்ணு பேசிக்கிட்டே போறே. ஒரு வாரம் டயம் தர்றேன். மரியாதையா இடத்தைக் காலி பண்ணலே போலீஸுக்குப் போவேன் ஜாக்கிரதை...!''

இதுவரை மரியாதையாகப் பேசிக் கொண்டிருந்த இன்னாசி முத்து பால் மாறினான்.

''இன்னாய்யாது இன்னா...! நானும் போனாப் போவுதுன்னு மருவாதியா பேசுனா, அலட்டிக்கிறியே... என்னய்யா நா பாக்காத பொல்லாத போலீசு. இந்தச் சப்தமும் நாத்தமும் புடிக்கலேன்னா கொல்லைக் கதவை இழுத்துச் சாத்திக்க. அதை விட்டுட்டு இந்த மெரட்டுற வேலை வச்சுக்காதே. புல் பூண்டு இல்லாம உன்னைத் தொலைச்சுருவேன்...''

இருவரின் வாக்குவாதத்தில் ஜனத்திரள் குழுமியது. மெஜாரிட்டி ஆதரவு இன்னாசி முத்து பக்கம்தான்.

''இவ்வளவு பேசுறியா இன்னாசி? போலீஸைப் பாத்துப் புகார் செய்துட்டு வரேன்...''

''தாராளமாப் போ! எனக்குப் பயமா? இன்சுபெட்டரை நான் ரொம்ப விசாரிச்சதாச் சொல்லு...''

இரண்டு கிலோ மீட்டர் தூரத்திலிருந்த காவல் நிலையத்துக்குப் பரணிவாசன் வேக வேகமாய் விரைந்தான்.

சப் இன்ஸ்பெக்டர் நாற்காலியில் படு சரிவாய் அமர்ந்து கால்களை மேஜை மேல் நீட்டியிருந்தார். அவர் எதிரே முப்பது வயதில் ஒரு பெண்.

எஸ். ஐ. அந்தப் பெண்மணியை ஆபாச

ஆர்னிகா நாசர்



**அடுத்த இதழில்...**



**●● கலகலத்துக் கொண்டிருக்கும் கர்நாடக காங்கிரஸ்**

**— நேரடி ரிப்போர்ட்**

அர்ச்சனை பண்ணிக் கொண்டிருந்தார்.

''சார்!'' என்றான் பரணிவாசன்.

கர்ணகடூர முகபாவத்துடன் திரும்பினார் எஸ். ஐ. ''யாருய்யா நீ?''

''என். பரணிவாசன்.''

''இருக்கட்டும். அதுக்கென்னா இப்ப?''

''நான் சர்க்கரை ஆலைல வேலை பாக்கறேன். ராமசாமி நகர்ல குடியிருக்கேன்.''

''இதெல்லாம் ஏய்யா என்கிட்டச் சொல்ற?''

''எங்க வீட்டுக்குப் பின்னாடி கள்ளச் சாராயம் விக்கறாங்க. எடத்தைக் காலி பண்ணுயான்னு சொன்னா ஆபாசமா பேசுகிறான். போலீஸையே திட்டுகிறான்...''

''யாரு இன்னாசிமுத்தா?''

''ஆமாங்க...''

''யோவ் உன் பேரென்ன சொன்னே... ஆங்... பரணிவாசன்! உனக்குப் புள்ளை குட்டிக இருக்கா?''

''ரெண்டு பசங்க. ஒருத்தன் ப்ளஸ் டூ. இன்னொருத்தன் நைன்த் படிக்கிறான்...''

''அப்புறம் என்னய்யா வேண்டாத வேலை? நாட்ல ஆயிரம் அயோக்கியத்தனம் நடக்கும். அதைப் போய்க் கண்டிப்பியா நீ? அது போகச் சாராயம் குடிக்கிறது தப்பில்லைன்னு கவர்ன்மெண்ட்டே விக்கற நேரமிது. கண்டதுல மூக்கை நீட்டாம உன் குடும்பத்தைக் கவனி போய்யா...''

''இதான் உங்க பதிலா? நான் மேலிடத்துக்குப் புகார் பண்ணுவேன்...''

''போய்டுவியா நீ? பொய் கேஸ் போட்டு உள்ளே தள்ளி பெண்டெடுத்துருவேன்...''

அதற்குள் ஏட்டு வேகமாய் வந்து பரணிவாசனை வலுக்கட்டாயமாய் வெளியே தள்ளி வந்தார்.

''வேண்டாம் சார். பார்க்கப் படிச்ச ஆளாயிருக்கீங்க. அந்த ஆள்கிட்டே வாதம் பண்ணாதீங்க. நியாயம் கிடைக்காதுங்க. நான் ஒரு வழி சொல்றேன். பேசாம வீட்டைக் காலி பண்ணிட்டு மசென்டா வேறொரு வீட்டுக்குக் குடி போங்க. அதுதான் பிரச்னைக்குத் தீர்வு...'' — அறிவுரை சொன்னார் ஏட்டு.

பரணிவாசன் தளர்வாய் வீட்டுக்கு வந்தான். நடந்ததையெல்லாம் மனைவியிடம் விவரித்தான்.

''அந்த ஏட்டு சொன்னதுதான் சரி. உடனே வேறே வீடு பாருங்க. போய்டுவோம்...'' என்றாள் அவள்.

**அ**டுத்த ஒரு வாரத்தில் வேறொரு வீடு பார்த்து விட்டான் பரணிவாசன்.

''வீடு பாத்துட்டேன் நிரஞ்சி!''

''வாடகை?''

''அம்பது ரூபா கூட. 450 ரூபாய் வாடகை. மூவாயிரம் அட்வான்ஸ்...''

''பணத்துக்கு என்ன பண்ணப் போறீங்க? இந்த வீட்டுக்குக் குடுத்த அட்வான்ஸ் மூணு மாச வாடகை பாக்கிக்குச் சரியாயிடும்...''

''அதான் ஒண்ணும் புரியலை. மூவாயிரத்துக்கு என்ன செய்யறது...?''

''ஒரு வேடிக்கையைக் கவனிச்சீங்களா...? அந்த இன்னாசிமுத்து நாம இந்த வீட்ல தொடர்ந்து இருக்கிறதுக்கு மாசம் ஐம்பது ரூபாய் தரத் தயாராய் இருந்தான். ஆனால் நாம் ஏற்கெனவே உள்ள வாடகையை விட மாசா மாசம் ஐம்பது ரூபாய் கூட குடுத்து இந்த இடத்தை விட்டுக் காலி பண்ணிப் போறோம்! அதோட மூவாயிரம் அட்வான்ஸ்!'' — சொன்னபடி தன் கையிலிருந்த இரண்டரை பவுன் மூங்கில் வளையைக் கழற்றிக் கணவனிடம் நீட்டினாள் நிரஞ்சனா.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: ம. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.



# கரம் மசாலா

**கல்கி**

21.10.90 இதழுடன் இலவச இணைப்பு





**கல்கி**

21-10-'90 இதழுடன் இலவச இணைப்பு

# இண்டர்வியூவைச் சந்திப்பது எப்படி ?




"காய்கறிகளிலேயே கத்தரிக்காய்தான் மிகவும் சிறந்தது என்பது என் கருத்து" என்றார் மன்னர்.

"அதிலென்ன சந்தேகம்! உலகத்திலேயே மிகச் சிறந்த காய் வகை கத்திரிக்காய்தான்" என்று ஆமோதித்தார் முல்லா நஸ்ருத்தின்.

சில நாட்கள் சென்று, "காய்களிலேயே மிக மோசமானது கத்திரிக்காய்தான் என்றார் மன்னர்.

இதையும் ஆதரித்தார் முல்லா.

"அப்படியென்றால், சில நாட்களுக்கு முன் வேறு மாதிரி கூறினீர்?" என்று அதட்டினார் மன்னர்.

நஸ்ருத்தின் சொன்னார்:

"நான் கத்திரிக்காயிடமா வேலை பார்க்கிறேன்! உங்களிடம்தானே வேலை பார்க்கிறேன்...?"

---

**எல். கே. ஜி.யில் சேரப் போகும் குழந்தையைக் கூட 'இண்டர்வியூ' செய்து தேர்ந்தெடுக்கும் காலம் இது! அத்தகைய ஒரு இண்டர்வியூவில், கடுகடுப்புக்குப் பெயர் போன ஆசிரியை, ஒரு குழந்தையைப் பார்த்து அதிகார தோரணையில் கேட்டார்:**

**"வாட் இஸ் யுவர் நேம்?"**

**மச்சருக்குக் கொஞ்சமும் சளைக்காத அந்த வாண்டு 'வெடுக்'கென்று திருப்பிக் கேட்டது:**

**"வாட் இஸ் யுவர் நேம்?"**

**ஆசிரியையின் கடுகடுப்பு இளகிவிட்டது! குழந்தைக்கு 'அட்மிஷன்' கிடைத்து விட்டது!**

**— அ. ஷண்முகசுந்தரம்.**

**ந**ர்ஸரி குழந்தையைப் போல் துடுக்காகப் பதில் சொல்வது வேலைக்கான இண்டர்வியூவில் செல்லுபடியாகாது. ஆனால், அந்தப் பதிலை வரவழைத்த அச்சமற்ற குணம் எந்த இண்டர்வியூவின் போதும் அவசியம் தேவை.

குழந்தை இயல்பாகவே பயமறியாக் குணம் படைத்திருந்தால் துடுக்காகப் பதில் சொல்லி, நல்ல பெயரெடுத்து விட்டது.

ஆனால் நாம் வளர வளர, அதிகார தோரணையைக் கண்டு அஞ்சவும் அடிபணியவும் பழகி விடுகிறோம். இண்டர்வியூவுக்குச் செல்லும் போது இவ்விரண்டையும் உதறுவது கஷ்டமாகி விடுகிறது.

**மனநல நிபுணரான டாக்டர் வி. ராமச்சந்திரன் கூறுகிறார்:**

இண்டர்வியூவில் கேட்கப்படும் கேள்விகள் உங்களை மிரட்டுவதற்காகக் கேட்கப்படுபவை என்று ஒருபோதும் எண்ண வேண்டாம். கேள்வி கேட்பவர்கள் பற்றியும் இண்டர்வியூவுக்கு வந்துள்ள மற்ற விண்ணப்பதாரர்கள் பற்றியும் அனாவசிய அதீத கற்பனையில் இறங்க வேண்டாம். இவர்கள் நம்மை விட அதிகம் படித்துள்ளார்கள், நம்மைக் காட்டிலும் அதிகம் தெரிந்திருக்கிறது என்று நினைத்துக் கொண்டே நேர்முகத் தேர்வைச் சந்திக்காதீர்கள்.

பொதுவாக முதலில் கேட்கப்படும் நான்கைந்து கேள்விகள், நீங்கள் அனுப்பிய விண்ணப்பம், **Bio data** போன்றவற்றில் ஏற்கெனவே இடம்பெற்றுள்ள விஷயங்கள் தொடர்பாகத்தான் இருக்கும். உங்கள் படபடப்பைக் குறைத்துக் கொண்டு சுதாரித்துக் கொள்ள அவகாசம் தரவே இவை கேட்கப்படுகின்றன. ஆனால் இந்த எளிய கேள்விகளுக்குக் கூட நீங்கள் புத்திசாலித்தனமாகப் பதில் சொல்ல வேண்டும்.

உதாரணமாக, 'எங்கே படித்தீர்கள்?' என்று

பலவீனத்திற்கான பரிகாரம் ஓயாது பலவீனத்தைக் குறித்துச் சிந்திப்பதல்ல; மாறாக வலிமை குறித்துச் சிந்திப்பதேயாகும்!

— சுவாமி விவேகானந்தர்.





இந்தியாவிலேயே மிக உயரமான குடியிருப்புக் கட்டடம் பம்பாய் 'பிரதிபா' பகுதியில் உள்ளது. 36 மாடிகள். சுமார் 400 அடி உயரம். ஒரு ஃப்ளாட்டின் விலை ஒரு கோடி ரூபாய்!

உச்சியில் உள்ள எட்டு மாடிகள் விதிமுறைகளை மீறிக் கட்டப்பட்டன என்று பம்பாய் கார்ப்பரேஷன் அவற்றை இடித்துத் தள்ள முற்பட்டது. ஆனால், நீதிமன்றத்தில் 'ஸ்டே' வாங்கியுள்ளதால் கட்டடம் தற்காலிகமாகக் காப்பாற்றப்பட்டுள்ளது. பிரச்னை இழுபறியில் உள்ளது.

— மாலி.

---

வாட் இஸ்
யுவர் நேம் ?

WHAT IS
YOUR NAME ?




பொதுக் கூட்டத்தில் ஒரு பேச்சாளர் பேச ஆரம்பித்தார்:

"இங்கே எனக்கு வேலை பேசுவது; உங்களுக்கு வேலை கேட்பது..." என்று அவர் கூறியதும் கூட்டத்தில் ஒருவர் எழுந்து கேட்டார்:

"எங்கள் வேலை ரொம்ப சுலபம்; மூன்று நிமிடங்களில் முடிந்துவிடும்; உங்கள் வேலை எப்படி?"




கேட்டால் 'சென்னையில்' அல்லது 'கோவையில்' என்று பதில் சொல்லாமல், எந்தப் பள்ளி, எந்தக் கல்லூரி, பல்கலைக் கழகம் போன்ற தகவல்களை உள்ளடக்கிப் பதில் சொல்லுங்கள்.

'தந்தை என்ன செய்கிறார்?' என்று கேட்டால் 'பிஸினஸ் செய்கிறார்' என்றோ 'ரிடையர்டு' என்றோ ஒரு வார்த்தையில் பதில் சொல்லாமல் என்ன பிஸினஸ் அல்லது எந்தப் பணியிலிருந்து ஓய்வு பெற்றுள்ளார் என்பதைத் தெளிவாகச் சொல்லுங்கள்.

வார்த்தைகளை மென்று விழுங்காமல், முழு வாக்கியங்களாக, தெளிவாக உச்சரிப்பது அவசியம். ஸ்டைலாகப் பேச வேண்டும் என்று நினைத்துக் கொண்டு உச்சரிப்பை மாற்றிக் கொள்ள (accent) முயல வேண்டாம். இயல்பாகவே பேசுங்கள். ஆரம்பக் கேள்விகளுக்கு இவ்வாறு உச்சரிப்பு, கருத்துத் தெளிவுடன் பதில் சொல்லி விட்டால் இண்டர்வியூ செய்பவர்களுக்கு முதல் அபிப்ராயம் நல்ல அபிப்ராயமாக அமைந்து விடுவதோடு உங்களுக்கே தன்னம்பிக்கை பிறந்து விடும்.

உங்களைப் பற்றிய கேள்விகளுக்குப் பிறகு, நீங்கள் மனு செய்துள்ள வேலை அல்லது உங்கள் படிப்பு தொடர்பான கேள்விகளைத்தான் சாதாரணமாகக் கேட்பார்கள்.

இந்தக் கேள்விகளுக்குப் பதில் தெரியாவிட்டால் மறைத்து, மழுப்ப வேண்டாம்.

'முன்பு வேலை பார்த்த நிறுவனத்துள் முதலாகச் சென்ற போது அத் துறை பற்றி, எனக்கு அதிகம் தெரியாது; ஆனால் பணியினூடே நிறையக் கற்றுக் கொண்டேன். அதே போல் வாய்ப்பளித்தால் இங்கும் கற்றுக் கொள்வேன்' என்ற ரீதியில் பதில் சொல்லுங்கள். இது உங்களுக்கு நிச்சயமாகப் பிளஸ் பாயிண்டாக அமையும்.

அதே போல் நிச்சயமாக மைனஸ் பாயிண்ட் வாங்கித்தரக்கூடியது 'குடும்ப நிலவரம், பொருளாதாரக் கஷ்டங்கள்' பற்றிய புலம்பல். உங்கள் சொந்தப் பிரச்னைகளும் சோகங்களும் அனுதாபத்துக்குப் பதிலாக எரிச்சலைத்தான் கிளப்பும், மாறாக,

'உங்கள் எதிர்பார்ப்புக்கு ஏற்ப நான் சிறப்பாகப் பணியாற்றுவேன் என்று நீங்கள் உறுதியளித்தால், நீங்கள் நம்பிக்கைக்குரியவராகக் காட்சியளிப்பீர்கள்.

இவை எல்லாவற்றுக்கும் அடிப்படைத் தேவை தன்னம்பிக்கை. உங்களை நீங்களே நம்பினால் தானே மற்றவர்கள் நம்புவார்கள்? இதை எப்படி வளர்த்துக் கொள்வது. சம்பந்தப்பட்ட துறையைப் பற்றி நன்றாகப் படித்துத் தெரிந்து வைத்துக் கொண்டு மனோரீதியாகத் தயார் செய்து கொள்ள வேண்டும். இதைத் தவிர, இண்டர்வியூவுக்கு அளிக்கப்பட்டுள்ள நேரத்திற்குப் பதினைந்து நிமிடங்கள் முன்னாலேயே போய்ச் சேர்வது; அழைப்புக் கடிதத்தில் மீண்டும் ஒருமுறை தேதி, நேரம், இடம் போன்றவற்றைச்



ஜப்பானில் ஒரு புதுவகை டெலிவிஷன் வந்துள்ளது. இந்த 'ரோபோ' டெலிவிஷன், நீங்கள் ஓர் அறையிலிருந்து மற்றொன்றுக்குச் சென்றால் உங்கள் பின்னாலேயே நடந்து வரும்!

---

சரிபார்த்துக் கொள்வது, தேவையான சான்றிதழ்களை, கேட்டவுடன் எடுத்துத் தர வசதியாக முன்கூட்டியே வரிசைப்படுத்தி வைத்துக் கொள்வது, ஆகியவை உதவும்.

அழகாக உடுத்திக் கொண்டு, தோற்றப் பொலிவோடு செல்வது அவசியம். கசங்காத, கச்சிதமான உடை உங்கள் பேரில் பிறர் வைத்துள்ள மதிப்பை உயர்த்துவது மட்டுமின்றி உங்களுக்கே தன்னம்பிக்கையை ஊட்டும். ராணுவம், போலீஸ் போன்ற பணிகளில் உள்ளோருக்குச் சீருடை எப்போதும் கச்சிதமாக இருக்க வேண்டும் என்று கூறுவது இதனால்தான். ஆடம்பர உடை நிச்சயம் தவிர்க்கப்பட வேண்டும். பெண்கள் புடைவை அணிவதே நல்லது. பட்டுப் புடைவை அல்ல. 'அடி'க்கும் வர்ணங்கள் கூடாது.

எவ்வளவுதான் தயார்ப்படுத்திக் கொண்டு, சீராக உடுத்திச் சென்றாலும் சிலருக்குக் கை கால்கள் உதறலெடுக்கும் அளவுக்கு பயமும் பதற்றமும் ஏற்படும். இதனை **Social Phobia** என்று மருத்துவப் பெயரிட்டு அழைப்போம். இத்தகையவர்களுக்குத் 'தியானம்' 'யோகாசனம்' போன்ற அமைதிப் பயிற்சிகள் தருவதன் மூலம் உதவ முடியும்.

- மிகையார்வம் (**anxiety**)
- பயத்தினால் வரும் குழப்பம் (**panic**)
- தாழ்வு மனப்பான்மை (**inferiority**









அடிக்கடி தவறு செய்கிறவன் அப்பாவி. ஒரே தவறைத் திரும்பத் திரும்பச் செய்கிறவன் மூடன். ஒரு தவறுமே செய்யாதவன் மரக்கட்டை. தன்னையறியாமல் தவறு செய்து விட்டுப் பின் திருத்திக் கொள்கிறவனே மனிதன்.

— கண்ணதாசன்.

அருமையான பாட்டுக் கச்சேரி. ஆலாபனை முடிந்து வித்துவான் கீர்த்தனை பாடத் தொடங்கினார். ரசிகர் ஒருவர் கூடவே பாட ஆரம்பித்து விட்டார். அவர் அருகே அமர்ந்திருந்தவர்கள் அவர் வாயை எப்படி அடைப்பது என்று கலங்கி யோசித்த போது, ஒரு புத்திசாலி ரசிகர் துண்டுக் காகிதத்தில் இரண்டு வரி எழுதி 'கூடவே பாடிய நபரிடம் நீட்டினார். அதில் "தயவுசெய்து மனத்துக்குள்ளேயே பாடுங்கள். நன்றி" என்று எழுதியிருந்தது. ரசிகரின் பாட்டு 'பட்'டென்று நின்றுவிட்டது!



---

complex) ஆகிய மூன்றுதான் பெரும்பாலான தோல்விகளுக்குக் காரணம். ஓரளவு சுய ஆராய்ச்சி, ஆத்ம சோதனை செய்து நம் குறைகளை, தவறுகளை நாமே கண்டுபிடித்துத் திருத்திக் கொண்டு விடலாம்.

எல்லாவற்றையும் விட மிக முக்கியமானதாக நான் கருதுவது; சொற்செட்டுடன் உரையாடும் திறமை. தெரிந்தது கொஞ்சமேயானாலும் பொறுக்கு மணிகளான வார்த்தைகளால் பதிலளித்தால் வெற்றி நிச்சயம்தான்.

**பெஸன்ட்ராஜ் கன்ஸல்டண்ட்ஸ் நிறுவனத்தின் டைரக்டர் டாக்டர் அமிர்தா பெஸன்ட்ராஜ் கூறுகிறார்:**

ஒரு நிறுவனத்திலிருந்து 'இண்டர்வியூ அழைப்பு வருகிறது.

சான்றிதழ்களை மட்டும் எடுத்துக் கொண்டு போனால் போதுமா? அது என்ன நிறுவனம், அதன் தயாரிப்புக்கள் என்ன, அதற்கு வாடிக்கையாளர்கள் யார், நிறுவனத் தயாரிப்பின் போட்டித் தயாரிப்புக்கள் என்ன — இவற்றைப் பற்றிக் குறைந்தபட்ச அறிவுடனாவது போவதே முக்கியமானது.

நீங்கள் முதல் வகுப்பில் பட்டம் பெற்றிருக்கலாம், தங்கப் பதக்கம் பெற்றவராகவும் இருக்கலாம். ஆனால் பாடத்துக்கும் அப்பாற்பட்ட பொது அறிவு மிக முக்கியமானது. வகுப்பறைக்கு வெளியேயுள்ள உலகம் வித்தியாசமானது. தொலைக்காட்சி, பத்திரிகைகள் இவற்றில் பொழுதுபோக்கு அம்சங்களோடு வாழ்க்கைக்குத் தேவையான அம்சங்களும் நிறையவே வருகின்றன. குறிப்பாக டீவியில் ஒளிபரப்பாகும் 'யு. ஜி. சி. நிகழ்ச்சிகள். இவையும் 'எகனாமிக் டைம்ஸ்', 'பிஸினெஸ் இண்டியா' போன்ற இதழ்களில் வெளியாகும் விஷயங்களும் உங்களின் சமகால அறிவுத் திறனை உயர்த்தும். தேசத்தின் இயற்கை, பொருளாதார வளங்களைப் பற்றியும் நிறையத் தெரிந்து கொள்ள வேண்டும்.

மார்க்கெட்டிங் எக்ஸிக்யூடிவ் வேலைக்குத் தேர்வு செய்ய முதல் கட்டத் தேர்வு என்று எடுத்துக் கொள்ளுங்கள். இந்த வேலைக்கு நீங்கள் ஏற்றவரா என்பதை விட, இந்த வேலையில் உங்களுக்கு உண்மையிலேயே ஈடுபாடு உள்ளதா என்பதை முக்கியமாக அறிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. விற்பனைத் திறமை, கூச்சப்படாத சுபாவம், ஓரளவு 'தடித்த தோல்' போக்கு இவை இல்லாமல் இந்தப் பணியில் பிரகாசிக்க முடியாது.

சோப்பு விற்கப் போவதானால் கூட, வெற்றி ஒன்றையே குறியாகக் கொண்டு அலைய வேண்டும். முகத்துக்கு எதிரே கதவு அடைக்கப்பட்டால் கூட கௌரவப் பிரச்னையாக்கிப் பொருட்படுத்தாமல், மீண்டும் மீண்டும் போகத் தயாராய் இருக்க வேண்டும்.

மிக மெதுவாக விற்பனையாவதில் சாதனை ஏற்படுத்திய புத்தகம் எது தெரியுமா...? லத்தின் மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட பைபிளின் ' புதிய ஏற்பாடு ' தான்! 1716 ஆம் ஆண்டு அச்சடிக்கப்பட்ட இதன் 500 பிரதிகளும் முழுவதும் விற்பனையாவதற்குள் 1907 ஆம் ஆண்டு முடிந்து விட்டது!

• • •



தேங்காய் எண்ணெயில் சுத்தமான உப்புக் கல்லைப் போட்டு வைத்தால் பல நாட்கள் கெடாது.

தேங்காயைச் சிறு துண்டுகளாக்கித் தயிரில் போட்டு வைத்தால், தயிர் மூன்று நாட்கள் வரை கூடப் புளிக்காமல் இருக்கும்.




சோப்பு நுரையில் முக்கி வைத்து. பிரஷ் போட்டுத் தேய் தேய் என்று தேய்த்தாலும் விடாத சட்டை காலர் மற்றும் கஃப் அழுக்கை அகற்றச் சுலபமான வழி:

வாசனை சோப் கட்டியை இரண்டு தடவை காலரில் அழுத்தித் தேயுங்கள்; அல்லது சோப்பில் முக்கிய சட்டைக் காலரில் டேபிள் ஸால்டைத் தடவி பிரஷ் போடுங்கள்... மாயமாய் மறையும் அழுக்கு!

"நீ என்னென்ன கேள்விகள் கேட்க விரும்புகிறாயோ கேள்...."



படத்தில் இருப்பது ஒரு ராட்சஸ வாக்குவம் கிளீனர். ஜூரிச் ரயில் நிலையத்தில் தண்டவாளப் பகுதியில் கிடக்கிற குப்பை, காகிதம், பாட்டில்கள், குளிர்பான டப்பாக்கள், மனிதக் கழிவுகளைக் கூட உறிஞ்சிச் சுத்தப்படுத்தி விடும்!

---

எனவே விண்ணப்பிக்கும் முன், நமக்கு இந்தத் துறை சரியானதுதானா, ஒத்து வருமா என்பதைப் பற்றி நன்கு யோசனை பண்ணித் திருப்தியிருந்தால் மட்டுமே நீங்கள் விண்ணப்பிக்க வேண்டும். பெற்றோர்கள் சொல்கிறார்களே என்பதால் ஒரு துறையில் புகாதீர்கள். சுயமாக ஆர்வமில்லா விட்டால் சோபிக்க முடியாது. ரோஜா செடியில் உயர்தர ரோஜாவை மலரச் செய்யலாம்; ஆனால் மல்லிப்பூ மலர வைக்க முடியாது.

இண்டர்வியூ அறைக்குள் தயக்கமில்லாமல் சற்று மிடுக்குடனேயே நடந்து வரலாம். பெண்களானால் புடைவைத் தலைப்பை முறுக்கிக் கொண்டிருப்பது, ஆண்களானால் மேஜை விளிம்பில் தாளமிடுவது, நாற்காலி நுனியில் வியர்க்க விறுவிறுக்க அமர்ந்து கொண்டு, 'எப்போது இண்டர்வியூ முடியும். எழுந்து வெளியே ஓடப் போகிறோம்' என்கிற மாதிரி அவஸ்தைப்படுவது எல்லாம் உங்களின் தன்னம்பிக்கையின்மையையே வெளிப்படுத்தும்.

நீங்கள் அடிக்கடி வேலை மாறியிருந்தால் விவரம் கேட்கத்தான் செய்வார்கள். எதையும் மூடி மறைக்காமல், 'பாஸிடிவ்' ஆக உரிய முறையில் பதிலளிக்க வேண்டும்.

கேட்கப்படும் கேள்விக்கான பதிலைச் சற்று யோசனை பண்ணி நிதானமாகச் சொல்வது கூட இண்டர்வியூக் குழுவினரால் வரவேற்கப்படவே



பாட்னாவில் பிரதீப் குமார் உபாத்யாயா என்ற மாணவனின் பரீட்சை மார்க் பலரை வியப்பில் ஆழ்த்தியுள்ளது.

விஞ்ஞானம்: $\frac{114}{100}$

பிசிக்ஸ் (செயல்முறை): $\frac{113}{50}$

— இப்படி மார்க் வாங்கினால் கட்டுப்படியாகுமா?!!

• • •

கால் மூடி, அரை மூடி எலுமிச்சம் பழம் பிழிய வேண்டுமா? பழத்தை வெட்டி வீணடிக்காதீர்கள். கம்பியால் ஒரு துளை போட்டுத் தேவையான அளவு சாறு பிழிந்து கொள்ளலாம்.





ஸோலார் சக்தியில் (சூரிய ஒளி சக்தி) இயங்கும் ஃப்ரிட்ஜ் ஃப்ரான்ஸில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதை மின்வசதி இல்லாத குக்கிராமங்களில்கூட இயக்கலாம். மருந்துகள் போன்றவற்றைப் பாதுகாக்கச் சௌகரியமானது.

---




செய்யும். 'எனக்கு இதற்கான பதில் தெரியவில்லை' என்று நேர்மையாகக் கூறி விடுவதும் தவறில்லை. கொஞ்சம் சந்தேகம் இருக்குமானால், "நான் ஊகமாகச் சொல்லலாமா?" என்று கேட்கலாம். அனுமதிப்பார்கள். அதற்காக எல்லாவற்றுக்குமே குருட்டுத்தனமாக "ஊகம்" செய்து பதில்தருவது எதிர் விளைவையே தரும்.

ஆனால் ஒருபோதும் தெரியாததைத் தெரிந்த மாதிரி காட்டிக் கொள்ளாதீர்கள்; உண்மைக்குப் புறம்பாகப் பேசாதீர்கள். குட்டு வெளிப்பட அதிக நேரம் ஆகாது!

இண்டர்வியூவுக்குச் சென்றவர் எம். பி. ஏ. பட்டதாரி. பல துறைகள் சம்பந்தப்பட்ட கேள்விகளை எதிர்பார்த்தார். அவரை அழைத்திருந்த பெரிய நிறுவனத்தின் எம். டி. அவர் சான்றிதழ்களை வாங்கி ஒரு பார்வை பார்த்து விட்டு,

"இந்த நிறுவனம் பற்றி நீங்கள் என்னென்ன கேட்க விரும்புகிறீர்களோ, கேட்கலாம்" என்றார்.

அந்த எம். பி. ஏ. பட்டதாரி கேட்ட கேள்விகளின் அடிப்படையில் அவருடைய அறிவுத்திறனும் குணாதிசயங்களும் கணிக்கப்பட்டன. அவருக்கு அந்த வேலையும் கிடைத்தது!

— அ. ஷண்முகசுந்தரம்.



முன்னாள் ஜனாதிபதி ஜெயில் சிங் தம் சுயசரிதையை எழுதிக் கொண்டிருக்கிறார். அதைப் புத்தகமாக வெளியிடும் பணி ஒரு தென்னிந்தியரிடம்தான் ஒப்படைக்கப்பட்டிருக்கிறதாம். ஆங்கிலம், இந்தி, உருது, பஞ்சாபி ஆகிய நான்கு மொழிகளிலும் ஒரே சமயத்தில் வெளிவாகப் போகும் இந்நூல் பெரிய சர்ச்சைகளைக் கிளப்பும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் சர்ச்சைகளால் ஜெயில் சிங் பாதிக்கப்பட மாட்டார்... தாம் இறந்த பின்னரே புத்தகம் வெளியிடப்பட வேண்டும் என்பது பிரகாசகர்த்தர்களுக்கு ஜெயில் சிங் விதித்துள்ள நிபந்தனை!

கார் அல்லது ஸ்கூட்டர், சைக்கிள் பார்க்கிங்குக்குச் சினிமா தியேட்டர்கள் போன்ற இடங்களில் டிக்கெட் தருவார்கள். இந்த டிக்கெட்களைப் பரிசோதகரிடம் திரும்பத் தரும் போது நடுவே ஓர் ஓட்டை போட்டு விட்டுக் கொடுங்கள். அதே டிக்கெட் மீண்டும் உபயோகிக்கப்படுவது தவிர்க்கப்படும்.

• • •

குழந்தைகளின் உடையில் 'சூயிங் கம்' ஒட்டிக் கொண்டால் அதை நீக்கச் சுலபமான வழி அதன் மீது ஒரு ஐஸ் கட்டியைத் தடவுவது தான்.



---

**"இதைப் போன்ற மாறுபட்ட இண்டர்வியூக்கள் இப்போது சகஜமாகிக் கொண்டிருக்கின்றன" என்கிறார் நீலா கங்காதரன், ஐ. ஏ. எஸ்.**

ஆண்டுக்கு இருபதாயிரம் பேரை அரசுப் பணிக்குத் தேர்ந்தெடுக்கும் ஸ்டாப் செலக்ஷன் கமிஷன் தென்மண்டல அலுவலகத்தின் இயக்குனர் இவர்.

''விஞ்ஞான பூர்வமான பல ஆராய்ச்சிகள் இது சம்பந்தமாய் நடத்தப்பட்டு வருகின்றன. எங்கள் கமிஷன், இண்டர்வியூ போர்டுகளில் இடம்பெறும் பிரமுகர்களுக்கே 'திறமையாய் இண்டர்வியூ செய்வது எப்படி' என்று பயிற்சி அளித்து வருகிறது. இதற்காக இருபதுக்கும் மேற்பட்ட ஒர்க் ஷாப்கள் நடத்தப்பட்டுள்ளன. இண்டர்வியூவுக்குச் செல்பவர், இண்டர்வியூ செய்பவர் இருவருக்குமே பயன்படும் விதமாக இரண்டு டாகுமெண்டரி படங்கள் கூட நாங்கள் தயாரித்திருக்கிறோம்'' என்கிறார் திருமதி. நீலா. இண்டர்வியூவுக்குச் செல்வோருக்கு அவர் தரும் சில டிப்ஸ்:

- நீங்கள், நீங்களாகவே இருங்கள். உங்கள் ஒரிஜினாலிடியை வெளிப்படுத்துங்கள்.

- இண்டர்வியூ என்பதே ஒரு கண் துடைப்பு. நமக்கு எங்கே வேலை கிடைக்கப் போகிறது என்கிற எண்ணத்தை அடியோடு விட்டு ஒழியுங்கள்.

- எந்த நிறுவனத்தில், எந்த பணிக்காக இண்டர்வியூவுக்குப் போகிறீர்களோ, அந்த நிறுவனம், அதிலே உங்களுடைய பணி, இவை பற்றி ஓரளவு தெரிந்து கொண்டு போங்கள். உதாரணமாய், சென்ட்ரல் எக்ஸைஸ் துறையில் இன்ஸ்பெக்டர் பணிக்கான நேர்முகத் தேர்வு என்றால், இன்ஸ்பெக்டரின் பணி எத்தகையது என்று உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என எதிர்பார்த்தால் என்ன தவறு?

- இண்டர்வியூ என்று பொதுப்படையாய்க் குறிப்பிடப்பட்டாலும், பர்சனாலிடி டெஸ்ட் என்பதே சரியான வார்த்தை. பர்சனாலிடி என்பதற்குப் பார்க்க அழகாய், உயரமாக, கவர்ச்சியாக இருப்பது என்பதல்ல அர்த்தம்! உங்களின் 'இன்னர் பர்சனாலிடி' என்பதே சரி! அகத்தின் அழகு எனச் சொல்லலாம்.

- அரசுத் தேர்வுகள் விஷயத்தில், ஆங்கிலத்தில் தான் கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டும் என்கிற கட்டாயமில்லை! தாய்மொழியில் கூட பதில் சொல்லலாம். தவறேதும் இல்லை. உங்களுக்கு விஷயம் தெரிகிறதா என்பதுதான் முக்கியமாய்ச் சோதிக்கப்படுகிறதேயொழிய, அதை ஆங்கிலத்தில் சொல்லத் தெரிகிறதா



ஒபராய் டவர்ஸ்! — இது பம்பாயில் உள்ள சூப்பர் டீலக்ஸ் ஐந்து நட்சத்திர ஓட்டல்! — 35 மாடிகள்; 1150 அறைகள்; 19 உணவகங்கள்... எல்லாம் உள்ளன. இங்கே இட்லி கிடைக்கும். ஒரு பிளேட் (இரண்டு இட்லி) விலை: நாற்பத்தைந்து ரூபாய்!

இந்தியக் கிரிக்கெட் வீரர் சசின் டெண்டுல்கர் இங்கிலாந்து டூர் புறப்படுவதற்கு முன்பு பிரபல ஷூ கம்பெனி விளம்பரத்துக்கு மாடலாக இருக்க ஒப்புக் கொண்டார். இதற்காக அவர் பெற்ற தொகை பதினெட்டு லட்சம்! இவ்வளவு பெரிய தொகையை வேறு எந்த இந்தியக் கிரிக்கெட் வீரரும் பெற்றதில்லையாம்.



என்பது இல்லை.

- சில இண்டர்வியூக்களின் முடிவில், இண்டர்வியூ எப்படி இருந்தது? இது பற்றி உங்கள் கருத்து என்ன என்று கூட கேட்பதுண்டு!

- இண்டர்வியூவுக்குப் போகிறவர் தாம் படித்த பாடங்களின் முக்கியமான விஷயங்களை லேசாய் ஒரு தடவை புரட்டிப் பார்த்து விட்டுச் செல்ல வேண்டியது மிக அவசியம். 'மூன்று வருடங்களுக்கு முன்பு படிப்பை முடித்தேன்! மறந்து போய் விட்டது!' என்கிற ரீதியிலான பதில்கள், எதிர்மறையான ரிசல்ட்டுக்கே வழி செய்யும்.

- எந்த ஒரு ரெக்ரூட்மெண்டிலுமே, எழுத்துத் தேர்வுக்குத்தான் நேர்முகத் தேர்வை விட அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

- மிகவும் பொறுப்பான பதவிகளுக்கான தேர்வு எனில், சில சிக்கலான சூழ்நிலைகளைக் கூறி, அத்தகைய ஒரு சூழ்நிலையில் நீங்கள் இருந்தால் எப்படி நடந்து கொள்ளுவீர்கள்? என்ன முடிவு எடுப்பீர்கள்? என்பது போன்ற கேள்விகள் கேட்கப்படும். அத்தகைய சந்தர்ப்பங்களில், நன்றாய் யோசித்து, தீர்க்கமான முடிவு எடுத்து, பதில் சொல்ல வேண்டியது அவசியம்.





வாட்சிங் ஜான்' — 'இது மேல் நாட்டில் வந்துள்ள புதுவிதமான பைனாக்குலர். தொலைவிலுள்ள பொருட்களைப் பார்க்க உதவுவதோடு அப்பொருள் எழுப்பும் ஒலியையும் கேட்க உதவும்!

**Watching John**
**Privacy Gone!**

• • •

ஊர் விட்டு ஊர் செல்லும் போது நண்பர் அல்லது உறவினர்களை ஸ்டேஷனுக்கு வரச் சொல்லி லெட்டர் எழுதுவோம். அம்மாதிரி சமயங்களில் நாம் பயணம் செய்ய உள்ள கோச் எண்ணையும் குறிப்பிட்டு எழுதினால் கூட்டத்தில் நம்மைத் தேடிக் கண்டுபிடிக்க அவர்களுக்கு வசதியாய் இருக்கும்.



தபால் உறை

உள்ளே இருக்கும் செய்தி ஒருவருடையது.
மேலே இருக்கும் முகவரி வேறொருவருடையது
ஆனால் கிழிபடுவதோ —
இடையிலே இருக்கும் நான்.

— இந்தப் புதுக் கவிதையை எழுதிய பிரபலஸ்தர் யார் தெரியுமா...! பிரதமர் வி.பி.சிங்!

---

**அத்தகைய சந்தர்ப்பத்தைத் தமது இண்டர்வியூவின் போது சமாளித்த அனுபவத்தைக் கூறுகிறார் ஆர். சீதா, பிரைவேட் செகரட்டரி, ஐ. சி. ஐ. எம். நிறுவனம்:**

"நீங்கள் ஒரு ரகசியமான கடிதத்தை டைப் அடித்துக் கொண்டிருக்கும் போது, திடீரென உங்கள் சிநேகிதி வந்துவிடுகிறார். என்ன செய்வீர்கள்?" — இதுதான் என்னிடம் கேட்கப்பட்ட கேள்வி.

நான் சொன்ன பதில்: "பதற்றபட மாட்டேன். பதற்றப்பட்டு, அவசர அவசரமாய் ஏதாவது செய்தால், அது வீணான சந்தேகங்களைக் கிளப்பி விடும். 'ரகசியக் கடிதமொன்றை டைப் செய்து கொண்டிருக்கிறேன், அப்புறம் வா' என்றும் தோழியிடம் நேரே சொல்ல முடியாது. எனவே ரொம்ப கேஷுவலாய், ரகசியக் கடிதத்தை டைப்ரைட்டரிலிருந்து எடுத்து, ஃபைலின் உள்ளே வைத்து விட்டு, அடுத்து வேறு ஒரு வேலையை ஆரம்பிப்பது போல, வெற்றுத்தாளை மெஷினில் வைப்பேன். சிநேகிதியுடன் பேசி அனுப்பிவிட்டு வேலையைத் தொடருவேன்."

இன்னொரு விஷயம்; இண்டர்வியூவின் போது, குறுக்கே குறுக்கே பேசுவது கூடாது. கேள்வி கேட்பவரை நேருக்கு நேர் பார்த்துப் பதில் சொல்ல வேண்டும். முகத்தை இறுக்கமாய் வைத்துக் கொள்ளாமல் புன்னகையுடன் இருக்க வேண்டும்.

ஸ்டெனோ வேலைக்கு இண்டர்வியூவும் டைப்பிங் ஷார்ட் ஹாண்ட் டெஸ்டுகளும் ஒரே நாளில்தான் வைப்பார்கள். இவற்றுள் ஷார்ட் ஹாண்டில் ஓரிரு வார்த்தைகள் விட்டுப் போனால் கூட நினைவிலிருந்து நிரப்பிக் கொள்ள முடியும். டைப்பிங் கச்சிதமாக இருக்க வேண்டும்.

இண்டர்வியூவின் இறுதியில், சம்பளம், வேலை நேரம் போன்ற விவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டால், உபயோகமாய் இருக்கும்.

**இப்போது தனியார் துறையில், எழுத்துத் தேர்வு, நேர்முகத் தேர்வு தவிர கலந்துரையாடல் தேர்வும் வைக்கிறார்கள். இது மிக முக்கியமாய்க் கருதப்படுகிறது" என்கிறார் சாய் பிரசாத் ஷெனாய். (கமர்ஷியல் டிரெய்னீ, சீமென்ஸ் நிறுவனம்):**

"என்னுடன் இன்னும் ஆறு பேர் இருந்தனர். ஒரு தலைப்பைக் கொடுத்து அது பற்றிக் கலந்துரையாடச் சொன்னார்கள். கலந்துரையாடல் ஆரம்பிக்கும் முன்னரே நான் மற்றவர்களுடன் அறிமுகப்படுத்திக் கொண்டு, ஒவ்வொருவர் பெயரையும் தெரிந்து கொண்டேன். தலைப்பு தரப்பட்டு, டிஸ்கஷன் துவங்கியது. என் கருத்

மெழுகுவர்த்திகளை ஃப்ரிஜ்ஜில் வைத்தால் நன்றாக நின்று எரியும். பவர் கட்டானால் தேடாமல் உடனே கண்டுபிடித்து ஏற்றவும் சௌகரியம்.

பாட்டரிகள், ஃபிலிம்ரோல்கள் கூட ஃப்ரிஜ்ஜில் வைத்தால் ஃப்ரஷ்ஷாக இருக்கும்!





படத்தில் இருக்கும் சிறுவனின் பெயர் தகானே கமிசி. வயது ஆறு. ஜப்பானில் வசிக்கும் இச்சிறுவன் கடந்த இரு வருடங்களில் சுமார் முந்நூறு கவிதைகள் எழுதியுள்ளான். இவற்றில் எழுபது 'ஹைகூ' கவிதைகள். அவன் கையில் வைத்திருப்பது அவன் எழுதிய கவிதைத் தொகுப்புப் புத்தகமே!



**நீங்கள் ஒயிட் காலர் ஆசாமியாக இருக்கலாம், பரவாயில்லை. ஆனால் 'டைட்' காலர் ஆசாமியாக இருந்தால் ரொம்ப ஆபத்து. ஆமாம்! டை கட்டிக் கொண்டு டைட்டாகக் கழுத்து பட்டனைப் போட்டுக் கொள்பவர்களுக்கு ரத்த ஓட்டம் பாதிக்கப்பட்டு, நாளடைவில் கண் பார்வையும், கேட்கும் சக்தியும் குறைய ஆரம்பிக்கும் — இது அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றில் செய்த ஆராய்ச்சியின் முடிவு.**

வைட்டமின்கள் பற்றி நிறையவே பிரசாரமாகியுள்ளது. மினரல் சால்ட்ஸ் எனப்படும் தாது உப்புக்களும் ஆரோக்கியத்துக்கு மிக அவசியமானவை. அவை:

கால்ஷியம்: பல், எலும்புகள் ஆகியவற்றுக்கு அவசியம் தேவை. பால், தயிர், சீஸ் போன்றவற்றில் உள்ளது.

ஃபாஸ்பரஸ்: உடலில் நிகழும் ஒவ்வொரு ரசாயன மாற்றத்துக்கும் இச் சத்து உபயோகமாகிறது. முழு தானியங்கள், பால், சீஸ் ஆகியவற்றில் கிடைக்கும்.

இரும்புச்சத்து: ரத்த ஓட்டம், அபிவிருத்திக்கு அவசியம். இறைச்சி, கீரை, பச்சைக் காய்கறிகளில் கிட்டும்.

இவை தவிர குரோமியம், கோபால்ட், செப்பு, ஃப்ளோரின், ஐயோடின், மக்னீசியம், மாங்கனீஸ், மாலிப்டெனம், பொட்டாஷியம், செலினியம், சோடியம், சல்ஃபர், ஜிங்க் ஆகிய தாது உப்புக்களும் சிறு சிறு அளவுகளில் தேவை.



---

துடன் ஒத்துப் போகிறவர் பேசும்போது, சரியான தருணத்தில், நானும் கலந்து கொண்டேன். அதேபோல் மாற்றுக் கருத்துக்கள் சொல்லப்பட்ட போது, நான் என் அக்கருத்திலிருந்து வேறுபடுகிறேன் என்பதையும் விளக்கினேன். ஒவ்வொரு முறையும், கருத்துக்களை ஒட்டியோ, வெட்டியோ பேசும்போது, சம்பந்தப்பட்டவரின் பெயரைத் தவறாமல் குறிப்பிட்டேன்.

என்னுடன் கலந்து கொண்ட இன்னொரு இளைஞன் பதற்றத்தில் முன்னுக்குப் பின் முரணாய்ப் பேசினான். இன்னொரு இளைஞன் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான். இன்னொருவன் ஒரே பாயிண்ட்டைத் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தான். நானும், என்னைத் தவிர மூவரும், நேர்முகத் தேர்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டோம். இதை அடுத்து இரண்டு கட்டங்களில் நேர்முகப் பேட்டியும் நடந்தது. வெற்றி என் பக்கம்!



**"இண்டர்வியூ தேதிக்கு ஒரு மாதம் முந்தைய பேப்பர்களை ஒரு தடவை பார்த்துக் கொண்டால் உபயோகமாய் இருக்கும்" என்கிறார் ரிசர்வ் வங்கி அதிகாரி பாபுஜி.**

"இண்டர்வியூதினம் மற்றும் அதற்கு முந்தைய தினத்து நியூஸ் பேப்பர்களைக் கொஞ்சம் 'தரோ' வாய்ப்படிக்க வேண்டும். என் விஷயத்தில், இது ரொம்ப உபயோகமாய் இருந்தது.

"நேர்முகப் பேட்டியின் போது, பொது அறிவுக் கேள்விகளை அவ்வளவாய்க் கேட்க மாட்டார்கள். காரணம், பொது அறிவைச் சோதிக்கிற எழுத்துத் தேர்வில் தேறிய பின்தான் நீங்கள் நேர் முகத் தேர்வுக்கு அழைக்கப்பட்டுள்ளீர்கள். ஆனால் நாட்டு நடப்புப் பற்றிய உங்கள் அறிவையும் அபிப்பிராயங்களையும் சோதிப்பார்கள். இதற்காகத்தான் செய்தித்தாள்களைப் படிக்க வேண்டும்.

"இண்டர்வியூவின் போது, கேட்கப்படும் கேள்விகள் புரியவில்லையெனில், மறுபடியும்

சார்லஸ் ஹாமில்டன் என்ற அமெரிக்கருக்கு உலகப் புகழ் பெற்றவர்களின் ஆட்டோகிராஃப்களைச் சேகரித்து ஏலம் விடுவது 'பிஸினஸ்'!

1963இல் ஹாமில்டன் முதல் முறையாக இத்தகைய ஏலத்தை நடத்தியபோது ஜூலியஸ் சீஸரின் கையெழுத்து இருபது லட்சம் டாலர்களுக்கும், ஷேக்ஸ்பியரின் கையெழுத்து பதினைந்து லட்சம் டாலர்களுக்கும், ஆபிரஹாம் லிங்கனின் கையெழுத்து ஒன்றரை லட்சம் டாலர்களுக்கும், பிரிதொருசமயம் ரிச்சர்ட் நிக்ஸனின் ராஜினாமாக் கடிதம் ஒரு லட்சம் டாலருக்கும் விலை போயின!



கொலைக் குற்றவாளியான ஜெயில் கைதி, தண்டனையின் போது ஜெயில் நூலகத்தின் லைப்ரரியனாகப் பணியாற்றினான். அப்போது அவன் லைப்ரரியில் எழுதி வைத்த அறிவிப்பு என்ன தெரியுமா...?

''இங்கே சப்தம் போட்டால் கொலை விழும்!''



மனம் வேதனையாய் இருக்கிறதா? திறந்த வெளிக்குப் போ; நன்றாக, நல்ல காற்றைச் சுவாசி; இயற்கையில் நன்றாக மூழ்கு! உன் களைப்பு தீரும், புத்துணர்ச்சி ஏற்படும்.

— கௌதம புத்தர்.

---

* ராதா கிருஷ்ணன்



* பாபுஜி



* சாய் பிரசாத் ஷெனாய்



* நீலா கங்காதரன்



கேள்வியைக் கூறச் சொல்லிக் கேட்கத் தயக்கம் காட்டக் கூடாது.

''விண்ணப்பத்தில் உண்மையான விவரங்களையே தரவேண்டும். ஏனென்றால் அந்த விவரங்களின் அடிப்படையில்தான் நம்மைச் சோதிப்பார்கள். 'சங்கீதத்தில் ஆர்வமுண்டு' என்று சும்மாவேனும் குறிப்பிட்டு வைத்தால் அது தொடர்பாகக் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் விழிப்போம்!''

**காவல்துறைத் துணைக் கமிஷனர் டி. ராதாகிருஷ்ணன் கூறுகிறார்:**

''சர்ச்சைக்குரிய விஷயங்களைப் பற்றி ஆதியோடு அந்தமாய்த் தெரிந்து கொண்டு, ஆராய்ந்து, தனக்கென்று ஒரு கருத்தை உரு

* சீதா





## ஃபிரிட்ஜைப் பாதுகாத்து முழுப் பயன் பெற...

ஒவ்வொரு முறை ஃப்ரிட்ஜ் கதவைத் திறப்பதற்கு முன்பும் சமையலுக்கு என்னென்ன தேவை என்று யோசித்து, பட்டிய லிட்டு எல்லா பொருட்களையும் ஒரே தடவையில் வெளியே எடுத்து விடுங்கள். கதவைச் சீக்கிரமாக மூடி விடுங்கள்.

ஃப்ரிட்ஜில் நிறையச் சாமான்களை வைக்கலாம். ஆனால் அவற்றைச் சுற்றிலும் காற்று ஓட்டத்திற்கு இடைவெளி இருக்க வேண்டும்.

ஃப்ரீஸரில், இதற்கு நேர் மாறாக, இடைவெளி அதிகம் இன்றி நெருக்கமாகப் பொருள்களை அடுக்க வேண்டும். காலி இடங்களில் ஐஸ் கட்டிகள் நிரம்பிய பிளாஸ்டிக் பைகளையோ, தண்ணீர் நிரம்பிய டெட்ராபாக் டப்பாக் களையோ வைக்கலாம்.

ஃப்ரிஜ் கதவு அழுத்தமாக மூடாவிட்டால் உங்களுக்கு மின் விரயம் மூலம் நஷ்டம் ஏற்படும். ஃப்ரிஜ் சரியாக இயங்காது. கதவிடுக்கில் ஒரு மெல்லிய காகிதத்தைக் கொடுத்து மூடி விடுங்கள். இப்போது காகிதத்தை வெளியே இழுக்க முயலுங்கள். காகிதம் சுலபத்தில் வெளிவரக் கூடாது. இவ்வாறு அன்றி எளிதில் வெளி எடுத்து விட்டால் கதவின் காஸ்கெட்டை மாற்ற வேண்டியிருக்கும். 'பேப்பர் பரிசோதனை'யை ஃப்ரிஜ் கதவின் நான்கு பக்கங்களிலும் செய்ய வேண்டும்.

தொகுப்பு:

ஜூலி, சாருகேசி.



வாக்கி வைத்திருப்பது அவசியம். நான் நேர் முகத் தேர்வுக்குச் சென்றபோது, ஒரு குறிப்பிட்ட சர்ச்சைக்குரிய பிரச்னை பற்றி எனது கருத்தைக் கேட்டனர். 'நேர்முகத் தேர்வின் போது நான் அனாவசியமான தர்க்கத்தில் ஈடுபட விரும்ப வில்லை' என்றேன்.

"'இல்லை! உன் கருத்தைச் சொல்லப் பூரண உரிமை உனக்கு உண்டு! தாராளமாய்ச் சொல்ல லாம்' என்றனர். 'எனவே, இண்டர்வியூவின் போது, கருத்துக்களைக் கேட்டால், தைரியமாய்ச் சொல்ல வேண்டும். அவர்கள் குறுக்குக் கேள்வி கள் கேட்டுக் கிளறினால், பொறுமையுடன் — (இது ரொம்ப முக்கியம் — நீங்கள் சட்டென உணர்ச்சிவசப் படுபவரா என்பதை இதன் மூலம் பரீட்சித்துப் பார்ப்பார்கள்) உங்கள் பாயிண்ட்டு களை எடுத்துச் சொல்லி, அவர்களை ஒப்புக் கொள்ளச் செய்ய முயலுங்கள். முடியாமல் போய், அவர்கள் உங்களை ஒப்புக் கொள்ளச் செய்து விட்டால், அவர்களது கருத்துக்களை ஏற்றுக் கொள்வதாகத் தயங்காமல் கூறுங்கள். அல்லது, 'ஜனநாயகத்தில் பலதரப்பட்ட கருத்துக்களுக்கு இடமுண்டு. **Let us agree to disagree on this subject**' என்று கூறுங்கள்.

"முன்பெல்லாம் இண்டர்வியூவுக்கு வரு வோருக்கு என்ன 'தெரியாது' என்பதைச் சோதிக்கவே கேள்விகள் கேட்பார்கள். மீண்டும் மீண்டும் இப்படிக் கேட்டுச் சிக்க வைக்கப் பார்ப் பார்கள். இப்போது இந்த 'நெகடிவ்' அணுகு முறை மாறிவிட்டது. வேலை தேடி வருபவனுக்கு என்ன தெரியும்? அவனை நாம் எப்படிப் பயன் படுத்திக் கொள்ளலாம் என்றே அறிய முற்படு கிறார்கள். அதனால் தன்னம்பிக்கையோடு இன்றைய இளைஞர்கள் இண்டர்வியூவுக்குச் செல்லலாம்.

**இண்டர்வியூவுக்குத் தாமதமாக வந்து சேர்ந்தார் ஓர் இளைஞர். இண்டர்வியூ நேரம் மாற்றப்பட்டதாக அவருக்கு அனுப் பப்பட்ட தந்தி வந்து சேராமையே கார ணம். இண்டர்வியூ செய்ய வேண்டிய உயர் அதிகாரி அவசரமாக ரயிலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். வந்த இளை ஞரைத் திருப்பியனுப்பி விடாமல் தம் முடன் காரில் ஏற்றிச் சென்றார். ஸ்டேஷன் போய்ச் சேரும்வரை காரி லேயே இண்டர்வியூவை நடத்தினார். அந்த இளைஞருக்கு அவ்வேலை கிடைத்தது!**

— அ. ஷண்முகசுந்தரம்.

இண்டர்வியூவைச் சந்திப்பதற்கான சூத்திரம் இதுதான்: துணிவு கொள்ளுங்கள்; தெளிவு கொள்ளுங்கள்; தெரிந்து கொள்ளுங்கள்!

தொகுப்பு: **யெஸ்பால், சந்திரமௌலி.**

# இந்த் ஜ்யோதி – உங்கள் வாழ்க்கையை ஒளிமயமாக்கும்... வருடா வருடம்



# IND JYOTHI

## 7 வருட வளரும் வருமான நிதி

| வருடம் | குறைந்தபட்ச உறுதிப்படுத்தப்பட்ட வருவாய் | காலவரை | |
|---|---|---|---|
| | | ஆரம்ப தேதி | முடிவுறும் தேதி |
| 1 | 12.75% | பங்கீடுபெற்ற தேதி | 31.3.92 |
| 2 | 13.25% | 1.4.92 | 31.3.93 |
| 3 | 13.75% | 1.4.93 | 31.3.94 |
| 4 | 14.25% | 1.4.94 | 31.3.95 |
| 5 | 14.75% | 1.4.95 | 31.3.96 |
| 6 | 14.75% | 1.4.96 | 31.3.97 |
| 7 | 15.25% | 1.4.97 | 31.3.98 |

இரண்டு திட்டங்களிலிருந்து ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் வசதி.

திட்டம் "ஏ" : வருடந்தோறும் அளிக்கப்படும் உறுதிப் படுத்தப்பட்ட வருவாய்.

திட்டம் "பி" : அறிவிக்கப்பட்ட உறுதிப்படுத்திய வருடாந்திர வருவாய் முதலீட்டுடன் சேர்க்கப்பட்டு முதிர்வடைந்ததும் திருப்பி அளிக்கப்படும்.

இந்தியன் பாங்கின் எல்லா கிளைகளிலும் விண்ணப்ப படிவங்கள் கிடைக்கின்றன மற்றும் ஏற்கப்படுகின்றன.

ஆரம்பத்திலேயே முதலீடு செய்பவர்களுக்குத் தனிச்சலுகை



**இந்தியன் பாங்க்**

பரஸ்பர நிதி

முக்கிய பொறுப்பாளர் : இந்தியன் பாங்க்

[illegible] மும்பாய்-400 023.

**உங்கள் செல்வச் செழிப்பின் சிற்பி**

## வழங்கீடு துவங்கிவிட்டது

A:2012:TM

